KALKI
16.3.86
ரூ. 1.50

# கல்கி

## ஆளைக் கொல்லும் அருவி

"ஏமாற்றங்களே தான்
என் வாழ்க்கையா?"
—[illegible]

# கல்கி

ஏப்ரல் 13

சித்திரைச் சிறப்பிதழில்

## கோவி.மணிசேகரன்

எழுதும்



# மாண்புமிகு முதலமைச்சர்

சரித்திரத் தொடர்



## அனுராதா ரமணன்

எழுதும்

# நெருப்பாக நீ

சமூகத் தொடர்

ஆரம்பம்



• ஆண்டிப்பட்டியிலுள்ள மருந்தகம் இதுதான்.



• வேலுச்சாமி.

# "எம்.ஜி.ஆர் பெயரைச் சொல்லி ஏமாத்திட்டாங்க சாமி!"

## — ஆண்டிப்பட்டிக்கு ஒரு விசிட்

ஆண்டிப்பட்டி அரசினர் மருந்தகத்தில் (கவனிக்க வேண்டும்: அது ஆரம்ப சுகாதார நிலையம்கூட இல்லை மருந்தகம்தான்.) பிரசவ வார்டின் வாசலில் உட்கார்ந்து கொண்டு தனது இரண்டு குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருந்தார், மூன்றாவது பிரசவத்துக்கு வந்திருந்த ஒரு பெண்மணி. ஜக்கம்பட்டியைச் சேர்ந்த அந்தப் பெண்மணியிடம், ''எங்கே உங்கள் வீட்டுக்காரர்?'' என்று பேச்சுக் கொடுத்தபோது - ''அவுகளா! டாக்டரம்மா மருந்து எழுதிக் கொடுத்தாக, அதை வாங்கிகிட்டு வரப் போயிருக்காக'' என்றார்.

நமக்கு ஆச்சரியம். முதல்வர் தொகுதியாயிருந்தும் அந்த ஆஸ்பத்திரியில் அந்த மருந்து இல்லையா?

டூட்டி டாக்டரைச் சந்தித்தபோது (ஸார்! பேர் போட்டுவிடாதீர்கள்) ''டெடனஸ்' இல்லைஸார். அதைத்தான் வாங்கச் சொல்லி அனுப்பியிருக்கோம்'' என்றார். 'டெடனஸ்' என்பது மிகவும் முக்கியமான மருந்து. பிரசவ வார்டு இருக்கும் அந்த மருந்தகத்தில் கண்டிப்பாக இருக்க வேண்டிய ஒன்று. ஆனால், டெடனஸ் போன்ற மருந்துகள் ஒரு குறிப்பிட்ட சீதோஷ்ண நிலையிலேயே வைக்கப் பட்டிருக்க வேண்டும். ஃப்ரிஜ் இல்லாததால் அது போன்ற மருந்துகளே அங்கு இல்லை.

டாக்டரைச் சந்தித்துவிட்டு, வெளியில் நின்ற சிலரிடம் விசாரித்தபோது, ''ஏதோ மாத்திரை கொடுக்கிறாங்க ஸார். மிகவும் அவசியம் ஏற்பட்டால்கூட மாலை வேளைகளில் ஊசி போட மாட்டாங்க. மாலை நேரங்களெல்லாம் கெட்ட நேரமோ என்னமோ!" என்றார்கள்.

கடந்த 17.9.85 அன்று நடந்த ஆண்டிப்பட்டித் தொகுதி ஆக்கப் பணிகள் துவக்க விழாவில், ஹண்டே பேசும்போது, 'ஆண்டிப்பட்டி மருந்தகத்தை இருபத்தைந்து படுக்கைகள் கொண்ட மருத்துவ மனையாக மாற்றுவதோடு, அறுவை அரங்கு, நுண்கதிர் பிரிவு, இரத்தப் பரிசோதனை நிலையம் ஆகிய அனைத்தும் ஏற்படுத்தப்படும்' என்றார். அவர் பேசி ஐந்து மாதங்கள் ஓடிவிட்டன. இருந்தும் மருந்தகத்தில் ஒன்றும் நடந்ததாகத் தெரியவில்லை. குறைந்தபட்சம் மருந்தகத்தைச் சுற்றிலும் மண்டிக் கிடக்கும் புதர்களையும் அதனால் பெருகியிருக்கும் கொசுக்களை

யும்கூட ஒழித்ததாகத் தெரியவில்லை.

இதே ஆண்டிப்பட்டியை ஒட்டிய பகுதி பாப்பம்மாள்புரம். இங்குள்ள குழந்தைகள், பள்ளிக்கூடம் செல்வதென்றால், பஸ்களும், லாரிகளும் விரைந்து செல்லும் மதுரை — தேனி மெயின் ரோட்டைக் கடந்துதான் செல்ல வேண்டும். குழந்தைகள் பள்ளிக்கூடம் சென்று திரும்பி வருவதற்குள், தாய்மார்களுக்குப் 'படக்', 'படக்'தான். இந்த நிலையைப் போக்க பாப்பம்மாள்புரம் மக்கள் ஒன்று சேர்ந்து ஒரு சங்கம் அமைத்து அதன் மூலம் ஐந்து வகுப்பு வரை உள்ள பள்ளி ஒன்றை ஆரம்பித்திருக்கிறார்கள். அதற்கும்

* கழிப்பிடம்: அருகில் போக முடியாத அசுத்தம்!

இடம் கிடைக்காததால் அப்பள்ளி வாடகை இடமொன்றில்தான் தற்காலிகமாக நடந்து கொண்டிருக்கிறது.

இந்தப் பாப்பம்மாள்புரத்தை ஒட்டி, ஆண்டிப்பட்டி — வைகை அணை சாலையில் பத்து ஏக்கருக்கும் மேற்பட்ட காலி நிலம் உள்ளது. இந்த நிலம் ஆண்டிப்பட்டிக் காளி கோயிலுக்குச் சொந்தமானது. அதில் சிறிது இடத்தைப் பள்ளிக்கூடம் கட்டுவதற்காகக் கேட்டபோது மறுத்துவிட்டார்களாம். ஆனால் கோயில் இடத்தில் கால் பகுதியை அரிசி மில் அதிபர் ஒருவர் குத்தகைக்கு எடுத்துப் பக்கா கட்டடங்களைக் கட்டியிருக்கிறார்! அது எப்படி என்பதுதான் அதிசயம்!

பாப்பம்மாள்புரத்திலுள்ள பள்ளி தோன்றுவதற்குக் காரணமாக இருந்த வேலுச்சாமி பேசும்போது, "இங்கே உள்ள நிலங்களின் விலை எக்கச்சக்கமாக ஏறிக் கொண்டே போகிறது. எங்கள் சங்கத்தால் வாங்க முடியாது. எனவேதான் அரசு காலியாக இருக்கும் இந்தக் கோயில் நிலத்தில் — குறைந்தபட்சம் இரண்டு ஏக்கராவது எங்களுக்குக் கொடுக்க வேண்டும் என்கிறோம். ஆனால் கொடுக்க மறுக்கிறார்கள். இந்து அறநிலையத் துறையைச் சேர்ந்த நிலம் என்பதால் அதற்கும் எழுதிப் பார்த்துவிட்டோம். பதிலே இல்லை. என்ன செய்வது?" என்றார்.

அதே பாப்பம்மாள்புரத்தில் ஹரிஜனங்கள் வசிக்கும் பகுதிக்குச் சென்றோம். ஐயகோ! இவ்வளவு மோசமான இடத்தில் மக்கள் வசிப்பார்களா? பார்க்கப் பார்க்க வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது.

ஒரு பொதுக் கழிவிடம். அதைச் சுற்றிலும் குடிசைகள். கழிவிடத்தைச் சுத்தப்படுத்திப் பல வருடங்கள் ஆகியிருக்க வேண்டும்; அத்தனை துர்நாற்றம். கழிவிடத்திற்குள் போகவே முடியாது என்பதால் கழிவறையைச் சுற்றி மக்கள் ஏற்படுத்தியுள்ள அசிங்கங்கள். சதா அதை முற்றுகையிட்டுக்கொண்டிருக்கும் பன்றிகள், சாக்கடை நீர்.... எங்களால் ஐந்து நிமிடம்கூட அங்கு நிற்க முடியவில்லை. அப்படிப்பட்டதோர் இடத்தில் அவர்கள் எப்படித்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்? நிறைய தண்ணீர் வசதியுடன் கழிப்பிடங்கள் சுகாதார முறையில் பராமரிக்கப்படாவிட்டால், கழிப்பிடங்கள் சுகாதார அபிவிருத்திக்குப் பயன்படுவதற்குப் பதில் அவற்றாலேயே நோய்கள் பரவும் அல்லவா?

அங்கே, மூன்று தலைமுறைகளாக வசித்துக் கொண்டிருக்கும் 'வெள்ளையம்மா' என்பவரிடம், "என்னம்மா, உங்களுக்கு கவர்மெண்டு ஒண்ணும் பண்ணலையா?" என்று கேட்டோம்.

"இல்லையே சாமி!" என்றார் அவர்.

"எம்.ஜி. ஆருக்குத்தானே ஓட்டுப் போட்டீங்க?"

"ஆமாம் சாமி! யாரோ வந்தாங்க! காசு கொடுத்தாங்க. அவர் பேரைச் சொன்னாங்க.

* வெள்ளையம்மா: "ஏமாத்திட்டாங்க சாமி!"



ஓட்டுப் போட்டோம்! ஆனா ஏமாத்திட்டாங்க சாமி!''

"எவ்வளவம்மா கொடுத்தாங்க?'' என்று துருவித் துருவி விசாரித்தபோது, சென்ற பொதுத் தேர்தலின்போது அந்தப் பகுதிக்கு ராகவானந்தம் வந்து, 'உங்களுக்கு நல்ல வீடுகள் கட்டித் தரப் போகிறோம்'' என்று வாக்குறுதி கொடுத்துவிட்டுச் சென்றார் என்பதை மட்டும்தான் சொன்னார்களே தவிர, அப்போதும் பணம் வாங்கிய விஷயம் பற்றிச் சொல்ல மறுத்துவிட்டார்கள்.

ஆண்டிப்பட்டியைச் சுற்றியுள்ள மயிலாடும் பாறை, ஆத்தங்கரைப்பட்டி, நாயக்கன்பட்டி, போன்ற ஊர்களிலெல்லாம் ஆதி திராவிட குடியிருப்புக்களைக் கட்டித் தரப் போவதாக அறிவித்திருக்கும் அரசுக்கு ஆண்டிப்பட்டியை ஒட்டியேயுள்ள இந்தப் பாப்பம்மாள்புரம் மட்டும் கண்ணில் படாமல் போனதுதான் ஆச்சரியம்!

இது முதல்வர் தொகுதி என்பதால் இன்று எந்தத் தொகுதியிலும் இல்லாத அளவுக்கு இந்தத் தொகுதியில் மட்டும் பத்துக் கோடி செலவில் வளர்ச்சிப் பணிகள் நடைபெறுவதாகவும் கடந்த நான்கு ஆண்டுகளில் மட்டும் நான்கு கோடி ரூபாய் செலவிடப்பட்டிருப்பதாகவும் அரசுத் தரப்பில் கூறப்படுகிறது. ஆனால் நாங்கள் ஆண்டிப்பட்டியைச் சுற்றிப் பார்த்தபோது, எல்லாம் விளம்பரத்தோடு போய்விடுமோ என்றுதான் அஞ்சத்தோன்றுகிறது.

சமீபத்தில் இங்கு ஆரம்பிக்கப்பட்ட அண்ணா கூட்டுறவு நூற்பாலையில், ஆண்டிப்பட்டிப் பகுதியைச் சேர்ந்த மக்களில் பத்து சதவீதம் பேரைக்கூட வேலைக்குச் சேர்த்துக் கொள்ளவில்லை என்றுதான் நாங்கள் சந்தித்த பெரும்பான்மை மக்கள் குறை கூறினர்.

இன்னொன்று பஸ் நிலையம். இன்னும் வசதிகள் செய்து பஸ்கள் முறையாகச் சென்று வர வழி செய்தால் என்ன?

ஆண்டிப்பட்டி தொகுதியில் இரண்டு ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன. ஒன்று ஆண்டிப்பட்டி; மற்றொன்று கடமலைக் குண்டு. சமீபத்தில் நடந்த பஞ்சாயத்துத் தேர்தலில் இந்த இரண்டு ஊராட்சி ஒன்றியங்களிலும் எதிர்க்கட்சி வேட்பாளர்கள்தான் வெற்றி பெற்றுள்ளார்கள். ஆக இந்த அரசு அறிவித்திருக்கும் வளர்ச்சிப் பணிகள் என்பது வெறும் கண் துடைப்புதான் என்பதை மக்களும் புரிந்துகொண்டுவிட்டார்கள் என்பதைத்தான் காட்டுகிறது.

— ப்ரியன்.

படங்கள்: மனோ.



# அடக்கப்பட்டவர்களுக்காக...

வைகை அணைக்கு அருகில் ஆண்டிப்பட்டிக்குப் போகும் சாலையில் இரத்தச் சிவப்பின் பின்னணியில் வெள்ளை எழுத்துக்கள்:

'அடக்கப்பட்ட கிராம மக்கள் மன்றம்.'

சாலையிலிருந்து தள்ளிச் சற்று உள்ளே ஒரு பர்லாங் தொலைவில் ஒரு சிறு கட்டடம். அதில் CROP என்ற எழுத்துக்கள் பளிச்சிட்டன. 'இது என்ன அமைப்பு?' என்ற ஆவல் மேலிட அந்தச் சிறு கட்டடத்திற்கு அருகே சென்று பார்த்தோம். 'ஞானக் குடில்' என்ற போர்டு தொங்கிக் கொண்டிருந்தது. அங்கு மூன்று பெண்கள் இருந்தனர். CROP என்பது Centre for Rural Oppressed People என்பதின் சுருக்கமாம்.

'அங்கு என்ன செய்கிறார்கள்? யார் இதை நடத்துவது?'

அங்கிருந்த மூன்று பெண்களில் ஒருவர் சொன்னார்: ''மதுரையில் உள்ள ஜார்ஜ் வில்மான்டிங் என்பவர்தான் இந்த மன்றத்தை ஆரம்பித்தார். வைகை அணை கட்டப்பட்ட போது பதினெட்டுக் கிராமங்கள் காலி செய்யப்பட்டன. அந்தக் கிராம மக்களில் பெரும்பாலோருக்குச் சரியான மாற்று ஏற்பாடுகளோ நஷ்டஈடோ கொடுக்கப்படவில்லை. அதனால் அந்தப் பதினெட்டு கிராமங்களைச் சேர்ந்த மக்களும் இன்று பரிதாபமான வாழ்க்கையைத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். தற்போதைக்கு அவர்களின் நலனைக் கவனிக்கத்தான் சில வேலைகளைச் செய்து கொண்டிருக்கிறோம். எங்களுக்கு அரசியல் வகுப்பும் உண்டு!''

தற்போது மூன்று பெண்கள் உட்பட மொத்தம் பன்னிரண்டு பேர் அந்த அமைப்பில் பணிபுரிகிறார்கள். மாதம் முந்நூறு ரூபாய்ச் சம்பளமாம். பாதிக்கப்பட்ட பதினெட்டு கிராமங்களுக்கும் சென்று அந்த மக்களின் தற்போதைய வாழ்க்கை நிலையை அப்படியே தெரிந்து கொண்டு ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒவ்வொரு பக்கம் ஒதுக்கப்பட்ட நோட்டுக்களில் பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள். ஒரு சின்ன விஷயத்தைக் கூட 'மிஸ்' செய்வதில்லை.

''ஜார்ஜ் எப்போது வருவார்?'' என்று கேட்டோம்.

''வாரம் இரு தடவை வருவார்!'' என்றார்கள் அவர்கள்.

மே. ஜெர்மனியிலிருந்து இந்த அமைப்பிற்கு உதவிப் பணம் வருகிறதாம். ''அங்கேயிருந்து சில பேர் வந்து இந்தக் கிராமங்களில் படம் எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்கள்'' என்றார்கள்! ஆமாம், எதற்காம்?

—எஸ். கே.





• ஆளைக் கொல்லும் யானை கஜம் இதுதான்!

# கும்பக்கரை அருவியா? கொலைகார அருவியா?

**பெ**ரியகுளம் டவுனின் புழுதியைப் பொருட்படுத்தாமல் கொஞ்ச தூரத்துக்குப் பார்வையை உயர்த்தி வீசினால் அந்த நகரத்துக்கு அழகிய பின்னணி அமைத்தவாறு கம்பீரமாய் நிமிர்ந்து நிற்கும் கொடைக்கானல் மலையைப்பார்க்கலாம். புழுதியிலும்வெப்பத்திலும்வதங்கும்சமதளவாசிகளுக்குக்கருணை காட்டும் வகையில், அந்தக் கொடைக்கானல் மலை ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறது. ஆங்காங்கே சேகரித்த காட்டாற்று நீரையும் மழை நீரையும் ஒன்றாக்கிப் பெரியகுளம் இருக்கும் திக்கை நோக்கி ஒரு குட்டி சிற்றாறை அனுப்பி வைத்திருக்கிறது. இந்தச் சிற்றாறு பெரியகுளம் நகரிலிருந்து ஏழு கி.மீ. தொலைவில் அருவியாக உருமாறி சுமார் பத்தடி உயரத்துப் பாறைகள் வழியாகச் சொரிகிறது. கும்பக்கரை அருவி என்று அழைக்கப்படும் இந்த அருவி, அனேகமாக ஆண்டு முழுவதும் வற்றாமல் சொரிந்து கொண்டிருக்கும். இது, பொழுது போக்கு வசதிகள் என்று பெரிதாகச் சொல்லிக் கொள்ள ஏதும் இல்லாத பெரியகுளம் போன்ற ஓர் இரண்டுங்கெட்டான் டவுனுக்கு வரப்பிரசாதமாக இருக்க வேண்டும் இல்லையா?

ஆனால், 'கும்பக்கரை' என்று சொன்னாலே குலை நடுங்கும் அளவிற்கு ஒரு பெயர் எடுத்திருக்கிறது இந்த அருவி. ஊரில்யாரைக் கேட்டாலும், ''ஐயோ! அது ஆபத்தான இடம் சார்! குழந்தை குட்டிங்களைக் கூட்டிப் போகவே லாயக்கில்லாதது!'' ''எத்தனை உயிர்களைப் பலி வாங்கின இடம்! நினைச்சாலே பயமாயிருக்கு'' போன்ற பதில்கள் தான் கிடைக்கின்றன.

ஓர் அருவி எப்படிப் பல உயிர்களைப் பலி வாங்கமுடியும்? அதுவும் வெறும் பத்தடி உயரத்திலிருந்து விழுகிற தண்ணீர்.... குற்றாலம் அருவி அளவுக்குக்கூட அதில் வேகம் இருக்குமா என்பதே சந்தேகம்.... இப்படிச் சிந்தித்தபடியே பயம் கலந்த ஓர் எதிர்பார்ப்போடு கும்பக்கரை அருவியைக் காணச் சென்றோம்.

கும்பக்கரையை அடைந்த எங்களுக்குப் பெரிய ஏமாற்றம் காத்திருந்தது. வருடம் முழுவதும் தண்ணீர் வரும் அந்த இடத்தில் பசுமை என்பதை மருந்துக்குத்தான் பார்க்க முடிந்தது. மொட்டைப் பாறைகளைக் கடந்து வரும் தண்ணீர் ஓர் இடத்தில் பத்தடி உயரத்திலிருந்து செங்குத்தாக விழுகிறது. அங்கு நின்று கொண்டு ஆனந்தமாகக் குளிக்கலாம். ஆனால் பயமில்லாமல் குளிக்க வசதியாகக் கைப்பிடிகளோ, கம்பிகளோ பாதுகாப்பாக இல்லை. எந்தக் காலத்திலோ போடப்பட்ட இரும்புக் கம்பி போதுமான அளவு பாதுகாப்புத் தரவில்லை. இந்தக் கம்பிகள்கூட பவானியைச் சேர்ந்த 'கிருஷ்ண விலாஸ்' செல்லம் ஐயர் என்பவரால் 1942ல் போடப்பட்டவை என்று அங்கு சிதைந்து கிடக்கும் ஒரு பெயர்ப் பலகை சொல்லுகிறது.

அருவி நீர் வழிந்து ஓடி ஒரு பள்ளத்துக்குள் விழுகிறது. இந்த மடு எவ்வளவு ஆழம் என்று பார்த்த வண்ணத்தில் சொல்ல முடியவில்லை. 'யானை கஜம்' என்று அழைக்கப்படும் இந்த மடுதான் உல்லாசமாகக் குளிக்க வந்த பள்ளிச் சிறுவர்களையும், இளம் மனைவியைக் கரையில் காத்திருக்கச் சொல்லிவிட்டு, குளிர நீராடலாம் என்று நினைத்து இரண்டு மாதங்களுக்கு முன்புகூட இங்கே 'டைவ்' அடித்த, புது மாப்பிள்ளையையும் பலி கொண்டுவிட்டு 'தனக்குஒன்றுமேதெரியாது' என்பதுபோல் வெயிலில் சோம்பலுடன் சிலிர்த்துக் கொண்டிருந்தது. சுற்றுமுற்றும் பார்த்தபோது, அதன் அருகில் ஓர் எச்சரிக்கைப் பலகைகூட இல்லாமலிருந்தது எங்களுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

கடந்த இருபது ஆண்டுகளாகக் கும்பக்கரை அருவிப்பகுதியில் எந்தவித அபிவிருத்தியும் செய்யப்படவில்லை என்று பெரியகுளம் வாசிகள் சொன்னதை நம்புவது கடினமாக இருக்கவில்லை. 1983ல் இந்த இடத்தை ஒரு சுற்றுலா மையம் ஆக்குவது குறித்து சட்டசபையில்கூட கேள்வி எழுப்பப்பட்டது.

ஆனால் இங்குள்ள பெண்கள் உடை மாற்றும் அறைகள் 'எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை' என்று பறைசாற்றிக் கொண்டு நிற்கின்றன. கூரையும் இல்லாமல் கதவும் இல்லாமல் சிதிலமடைந்து போன அந்த இரண்டு அறைகளும் அரசின் பராமரிப்பு ஒரு கேலி கூத்து என்பதற்கு எடுத்துக்காட்டாக இருக்கின்றன. அரசு மனம் வைத்தால் கும்பக்கரையை ஓர் அழகான சுற்றுலா மையமாக்க முடியும். சிப்பந்திகளை அமர்த்தினால் குளிப்பவர்களை எச்சரிக்கவோ, ஆபத்துக்கு உதவவோ முடியும் என்பதுடன் உடைமாற்றும் அறையின் கதவுகளும் கூரையும் களவு போகாமல் இருக்கும்.

தற்சமயம் பெரியகுளத்திலிருந்து கும்பக்கரைக்குக் காலையில் ஒரு பஸ்ஸும் மாலையில் ஒரு பஸ்ஸும்தான் விடுகிறார்கள். ஒரு பகல் முழுவதும் தங்கிப் பொழுதைக் கழிப்பவர்களுக்கு வசதியாக ஒரு ஹோட்டல் அமைத்தால் வீட்டுப் பெண்களுக்குச் சோற்று மூட்டை கட்டும் வேலை மிச்சமாகும். ஒரு நாள் பூரண ஓய்வு பெற்று, வித்தியாசமான ஒரு சூழலில் பொழுதைக் கழித்த சந்தோஷத்தில் அரசையும் வாழ்த்துவார்கள்.

எல்லாவற்றுக்கும் முன்பாக செய்ய வேண்டிய காரியம் ஆனந்தமாகப் பொழுதைக் கழிக்க வந்தவர்கள் அநியாயமாகப் பலியாவதைத் தடுத்து நிறுத்துவதுதான். இதற்கு, அபாயகரமான அந்த மடுவைச் சுற்றிப் பாதுகாப்பாய் ஒரு வேலி அமைத்து, எச்சரிக்கைப் பலகை எழுதி வைத்தால் போதும். பிறகு 'கும்பக்கரை அருவியா கொலைகார அருவியா?' என்ற பயம் நீங்கி மெல்ல மெல்ல அது ஒரு 'பிக்னிக்' சென்டராக அமைவதோடு, எதிர்காலத்தில் ஒரு டூரிஸ்ட் மையமாகக் கூட மாற வாய்ப்புண்டு.

— கௌசல்யா

அட்டை வண்ணப்படம், படங்கள்: மனோ.

# மாதம் ஒரு மாவட்டம்

தஞ்சை மாவட்ட மக்கள்
கவனத்திற்கு......

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், மூன்றாவது மாவட்டமாகத் தஞ்சை மாவட்டம் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது உங்கள் அனைவருக்கும் தெரியும். அதன்படி, தஞ்சை மாவட்டத்திலுள்ள குறைகளும் முறையீடுகளும் தவிர, பெரிய சாதனைகள் பற்றிய குறிப்புக்களையும் கல்கி அலுவலகத்திற்கு எழுதி அனுப்பிவிட்டீர்களா?

உங்கள் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி: 20.3.86. உடனே எழுதி அனுப்புங்கள்.

— ஆசிரியர்.




பி.கு: இப்போது நமது பிரதிநிதிகள் பெரியார் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சேகரித்துக் கொண்டு வரும் பரபரப்பான செய்திகளும், பேட்டிக் கட்டுரைகளும் ஏப்ரல் 20, 27 தேதியிட்ட இரண்டு கல்கி இதழ்களிலும் பிரசுரமாகும்.



# பரிட்சை நெருங்கிடும் காலம்? கவனமாக படித்திடும் நேரம்

முழுதும் தயாராயிருந்திட வேண்டிய காலம்
**காம்ப்ளான்®**
பருக வேண்டிய நேரம்.

## காம்ப்ளான்® ஒன்றில்தான் அவனுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் 23 மூலாதார சத்துணவுகள் உள்ளன.

குழந்தைகள், முக்கியமாக பரிட்சைக்கு படிக்கும் காலத்தில், திடமாக இருந்திடுவது அவசியம். அதனால்தான் பரிட்சை நடக்கும் நேரம் காம்ப்ளான் நேரம் என்று அன்னையர் அறிவர்.

<u>உடல் வளர்ச்சியில் பங்கு பெறுவதே புரதம் என்ற சத்துதான்.</u> காம்ப்ளானில் குழந்தைகளுக்குத் தேவையான புரதம் (20%) இருப்பது மட்டுமல்ல, அப்புரதம் மிகச்சிறந்த புரதமுமாகும் (பால் புரதம்). அத்துடன், அது குழந்தைகளுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச்சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் ஆகிய 22 கூடுதல் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும்.

துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு—அன்றுடம் இருவேளை. நினைவில் இருக்கட்டும் டாக்டர்களின் சிபாரிசுபெற்ற திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

காம்ப்ளான் கிடைக்கிறது, இனிய சுவைகளாம் சாக்கலேட், ஏலக்காய்—குங்குமப்பூ, ஸ்ட்ராபெர்ரியும், சாதா ரகத்திலும்.

குழந்தைகள் மிகவும் விரும்பிடும் சுவைகள்.









**காம்ப்ளான்®—திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

884.GLC.11 Tam.




# கல்கி

1986 மார்ச் 16
மலர் 44 இதழ் 33
குரோதன பங்குனி 3




## ஒரு தந்திரமும் ஓர வஞ்சனையும்!

இவ்வாண்டு பட்ஜெட்டை யாரும் அதிகமாகக் குறை கூறாமல் விட்டிருப்பதற்குக் காரணம் ஓர் ஏமாற்று வேலை. நாடாளுமன்றத்தில் அறிவிக்காமல், பட்ஜெட்டுக்கு வெளியே திடீரென்று எரி பொருள்களின் விலைகளை எக்கச்சக்கமாக உயர்த்தி விட வேண்டியது; மக்கள் ஆவேசத்துடன் ஆட்சேபிக்கும்போது கூடவே தங்கள் கட்சி அமைச்சரையும் எதிர்ப்புக் குரல் எழுப்பச் சொல்ல வேண்டியது; பிறகு ராஜீவின் பரிவும் கரிசனமும் செயல்படுவது போல் காட்டிக் கொண்டு விலை உயர்வை ஓரளவு குறைத்து நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள வேண்டியது! ரயில்வே பட்ஜெட்டிலும் டிக்கெட் விலையை உயர்த்தாததற்கு அதிகமான முக்கியத்துவம் தந்து பிரசாரம் செய்து, அதன் மூலம், ரிசர்வேஷன் கட்டணத்தை உயர்த்தியது தெரியாமல் செய்துவிட வேண்டியது!

இந்தத் தந்திரங்கள் ஒருபுறமிருந்தாலும், "எனது சட்டையில் பித்தான் உடைந்திருக்கிறது என்று குறை கூறுமுன்னர் சட்டைத் துணியின் தரத்தையும் அது தைக்கப்பட்டுள்ள நேர்த்தியையும் பாருங்கள்" என்று வி.பி. சிங் கூறியதில் அர்த்தமிருக்கிறது. ஏனெனில் சர்க்கஸ் கோமாளி அணிவதைவிட வேடிக்கையான பட்ஜெட் உடைகளை இதற்கு முன்பிருந்த பல நிதி அமைச்சர்கள் அணிந்து பார்த்தவர்கள், நாம்!

வி.பி. சிங்கின் இந்த பட்ஜெட்டை விமர்சிப்பதற்கு முன் சென்ற ஆண்டில் அவர் கடைப் பிடித்து வந்துள்ள கொள்கைகளால் என்ன நன்மை அல்லது தீமை விளைந்திருக்கிறது என்று பார்க்க வேண்டும். அப்படி நோக்குகையில் பல நேர்முக, மறைமுக வரிகளை அவர் குறைத்ததால் ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை என்றும் மாறாக வரி குறைப்பால் வரி ஏய்ப்பு குறைய வரி வசூல் 22 சதம் அதிகரித்திருப்பதைக் காண்கிறோம். அதே நேரத்தில் திட்ட இனங்களில் செலவழிப்பதாகச் சொன்ன அளவைவிட அதிகமாகவே செலவழிக்க முடிந்திருக்கிறது என்பதையும் பார்க்கிறோம். இதன் விளைவாகத் தொழில் அபிவிருத்தி தடைபடாததோடு பற்றுக்குறை பட்ஜெட்டால் விளையக் கூடிய கேடுகளும் கணிசமாகக் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. விலைவாசிகள் அதற்கு முந்தைய ஆண்டுடன் ஒப்பிடுகையில் ஓரளவு ஸ்திரமாகவே இருந்து வந்திருக்கின்றன. விவசாய உற்பத்தியும் தொழில் உற்பத்தியும் முந்தைய ஆண்டை விடக் கணிசமாக அதிகரித்திருக்கின்றன.

ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில்தான் பெரிய ஏமாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. ஏற்றுமதி எதிர்பார்த்த அளவில் அதிகரிக்காதது கவலைக்குரியது. இறக்குமதிகள் அதிகரித்ததற்குக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியது காரணம் அல்ல என்பதைத் தெளிவாக்கியுள்ளார் வி.பி. சிங். முக்கியமாகப் பெட்ரோலியம் எரி வாயு கமிஷன் (ONGC) புதிய எண்ணெய்க் கிணறுகளைக் கண்டு பிடிக்கக் குடைவதிலும் சுத்திகரிப்புச் செய்வதிலும் அதி தீவிரமாக ஈடுபட்டிருப்பதால் இதற்கு அயல்நாடுகளிலிருந்து ஏராளமான உபகரணங்களைத் தருவிக்க வேண்டியிருந்திருக்கிறது. அடுத்தபடியாக நுகர் பொருளான எண்ணெய்களைப் பெருமளவு இறக்குமதி செய்யவும் நேர்ந்திருக்கிறது. மக்கள் உணவில் பயன்படுத்தும் இந்த எண்ணெய்களை உள் நாட்டிலேயே அதிகமாக உற்பத்தி செய்ய இந்த பட்ஜெட்டில் சலுகைகளும் ஊக்கங்களும் தரப்பட்டுள்ளன.

"ஏழைமையை ஒழிப்போம்" என்ற கோஷத்துடன் நடக்கும் கடன் வழங்கு விழாக்களில் (லோன் மேளா) கிராமப்புற மக்கள் மட்டுமின்றி நகர்ப்புறங்களிலும் உழைப்பாளர்கள் பலர் பயன் பெற சில திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இந்தத் திட்டங்கள் கட்சிக்காரர்களின் வளர்ச்சிக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆட்சேபிக்கக் கூடிய முக்கியமான விஷயம் அரசுத் துறை நிறுவனங்கள் வழங்க இருக்கும் கடன் பத்திரங்கள். இதில் முதலீடு செய்தால் அந்தத் தொகைக்குச் செல்வ வரியும் இல்லை. அதில் கிடைக்கிற வட்டிக்கு வருமான வரியும் இல்லை என்று கூறப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டம் தனியார் துறைக்கு வஞ்சனை செய்ததாகும் என்பது ஒருபுறமிருக்க, ஏற்கெனவே நிர்வாகக் கோளாறுகளால் சீரழிந்து கொண்டிருக்கும் அரசுத் துறை இத்திட்டத்தால் கிடைக்கக் கூடிய ஏராளமான பணத்தைச் சரியாகக் கட்டிக் காத்து முறையாகப் பயன்படுத்தி வெற்றி பெறும் என்பது என்ன நிச்சயம்? கவலையே மேலோங்குகிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

* 'ஆங்கரை' ஆனந். ஆங்கரை.

? அ. தி. மு. க. வுக்கு எதிர்காலம் உண்டா? இல்லே தி. மு. க. வுக்கு எதிர்காலம் உண்டா?

! உருப்பட்ட மாதிரிதான். 'நமக்கு எதிர் காலம் உண்டா?' என்று எப்போதுதான் கேட்கப் போகிறீர்களோ தெரியவில்லை.

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? தள்ளுபடி விலைகளில் நம்பிக்கை உண்டா?

! சத்தியமாய் இல்லை. சமீபத்தில் மத்திய அரசு பெட்ரோலியப் பொருள்களின் விலையை ஏற்றி, பின்னர் கொஞ்சம் இறக்கி யதைப் பார்த்த பிறகு, தள்ளுபடிகளும் அப் படிப்பட்டதொரு தந்திரம் என்றுதான் நினைக்க முடிகிறது.

* வி. ரமேஷ், பெங்களூர் — 10.

? வானொலிச் செய்திகள், டீ. வி. செய்தி கள் — எது தேவலாம்?

! ஒருமுறை குஷ்வந்த் சிங் எழுதியிருந்த கதைதான் நினைவுக்கு வருகிறது. ஒரு மனி

# நட்சத்திர எம்.பி.க்கள்

தன் தேவலோகத்திற்குச் சென்று கடவுளைப் பார்க்கிறான். கடவுள் அமர்ந்திருந்த அந்த மிகப் பெரிய ஹால் முழுவதும் கோடிக் கணக்கான சிவப்பு விளக்குகள் பொருத்தப் பட்டுள்ளன. அவற்றில் இங்கொன்றும் அங் கொன்றுமாய்ச் சில விளக்குகள் எரிந்து எரிந்து அணைந்து கொண்டிருந்தன. காரணம் புரியாத மனிதன் கடவுளிடம் விளக்கம் கேட்டான். அதற்குக் கடவுள், 'பூலோகத்தி லுள்ள யாராவதொருவர் பொய் பேசினால் இங்குள்ள ஒரு சிவப்பு விளக்கு எரியும். இங்கொருவரும், அங்கொருவருமாய்ப் பொய் பேசினால் விளக்குகளும் இங்கொன் றும் அங்கொன்றுமாய் எரியும்!' என்றார். அவர் சொல்லி வாய் மூடுவதற்குள் திடீ ரென்று எல்லாச் சிவப்பு விளக்குகளும் பிர காசமாய் எரிந்தன. மனிதன் விழித்தான். கடவுள் சொன்னார்: வேறொன்றுமில்லை, பக்தா. இப்போது பூலோகத்திலுள்ள வானொலியிலும், டீ.வி.யிலும் செய்தி வாசிக் கிறார்கள்!

* ஆர். ஜி. சிவக்குமார், பழனி — 1.

? 'நெருப்பைக் கிரீடமென்று
ஏமாந்ததோ!
பாவம், மெழுகுவர்த்தி.— இந்தக் கவிதை
பற்றி?

! அற்புதமான கவிதை. படிக்கும்போதே மனம் கனத்துப் போகிறது. அரசியல்வாதி களை நம்பி நம்பி ஏமாந்து கொண்டிருக்கும் இந்நாட்டு மன்னர்களின் அவலநிலை பற்றி விளக்குவதற்கு இதைவிடவும் சிறந்த உதாரணத்தைச் சொல்லிவிட முடியாது. எழுதியவர் யாரய்யா? அப்படியே கட்டிப் பிடித்து உச்சி மோந்து பாராட்ட வேண்டும் போல் இருக்கிறது.

* கே. பிரதாப் சிங், அரகண்டநல்லூர். *

? கல்வி, வேலை வாய்ப்பு இவற்றில் காட் டப்படும் சலுகைகளால் மட்டுமே ஹரி ஜனங்களை உயர்த்திவிட முடியும்' என்று மத்திய—மாநில் அரசுகள் நினைத்துக் கொண் டிருக்கின்றனவா?

! உண்மையில் சலுகைகளால் மட்டும் அவர்களை உயர்த்திவிட முடியாது. முன் னேறிய வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் இரண்டு பேருக்கும் ஒரே மாதிரி பாடம் நடத்தினால் எப்படி தாழ்த்தப்பட்டவர்களால் இதர மாணவர்களோடு போட்டி போட்டுக் கொண்டு பாடங்களைப் புரிந்து கொள்ள முடியும்? எனவே, ஹரிஜனங்கள் உள்ளிட்ட தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கென்று சில சிறப்பு வகுப்புகள் எடுத்துப் பயிற்றுவிப் பதுதான் நல்லது. இப்படிச் செய்து வந்தால் சில காலம் சென்ற பிறகேனும் 'விசேஷச் சலுகைகள் இனி கிடையாது; அனைவரும் சமம்' என்று கூறும் தகுதி அரசுக்கு உண் டாகும். தாழ்த்தப்பட்டவர்களுக்கும் தன் னம்பிக்கை ஏற்பட்டிருக்கும்.

* அருண், ஈரோடு—3.

? பாக்யராஜ் தேர்தல் பிரசாரம் எடுபடா தது ஏன்?

! ஒண்ணு இருக்குமிடத்தைவிட்டு அசை யாதபோது 'வெறும் பூஜ்ஜியங்கள்' இங்கு மங்கும் ஓடிப் பிரசாரம் செய்து என்ன பிர யோஜனம்?

* பா. நாராயணன், சென்னை—40.

? பதவி சுகம் அனுபவித்தவர்களால் சும்மா இருக்க முடியாதென்றும் அதற்கு மனோநிலைதேவையென்றும் உதாரணத்திற்கு ராஜாஜியைக் காட்டியுள்ளீர்கள். கவர்னர் ஜெனரல் பதவி வகித்த ராஜாஜியும் பிறகு தமிழக முதல்வர் பதவிக்கு வந்தது சரி யாய்ப் படவில்லையே?

! நினைத்தேன்; இப்படிப் பல பேர் தப்பர்த் தம் செய்து கொள்வார்கள் என்று! ராஜாஜி முதல்வர் பதவி ஏற்க வேண்டிய கட்டாயத் திற்கு ஆளானாரே தவிர அவராகத் தேடி யலைந்து பெறவில்லை. கவர்னர் ஜெனரலாக இருந்த போதும் ஜனகரைப் போல் துறவு

மனப்பான்மையுடன் வாழ்ந்தவர் அவர்.

* மா. அய்யப்பன், நாட்டரசன்கோட்டை.

? நாத்திகம், ஆத்திகம் — எது சிறந்தது?

! மனித நேயம்தான் எல்லாவற்றையும் விடச் சிறந்தது நண்பரே!

* ஆர். எஸ். இராஜ், காரைக்கால்.

? நட்சத்திர எம். பிக்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?

! நம்ம ஊர் நியமன எம்.பி. தமது பதவிக் காலம் முடியப் போகிறதே! மீண்டும் தொடர வைப்பார்களா என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார். நாட்டிய எம்.பி.யோ லோன் மேளா, பி. எம். விசிட் போன்றவற்றில் புகுந்துகொண்டு அட்டகாசம் செய்துகொண்டிருக்கிறார். அலகாபாத்காரரோ நாள்தோறும் தமது வீட்டெதிரே நடந்து கொண்டிருக்கும் ஆர்ப்பாட்டங்களைச் சந்தித்துக் கொண்டிருக்கிறார். 'அது சரியய்யா.... முக்கியமானவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்?' என்று துடிக்கிறீர்களா? வாய்ப் பூட்டுப் போடப்பட்டு விட்டதால் அவ்வப் போது கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார்!

* மின்னல் பிரியன், மானாமதுரை.

? 'புதுக்கவிதை எழுதத் தெரிந்தவர்களைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்களாக நியமிக்க வேண்டும்' என்று கவிஞர் வைரமுத்து கூறியுள்ளாரே...?

! அவருக்கு அப்படியொரு ஆசையும் இருக்கிறதா! த்சொ, த்சொ!

* குருசாமி, சென்னை—44.

? 'தீக்குளித்தல்' என்று நம்மூர்த் தொண்டர்கள் கையாளும் பழக்கம் மற்ற மாநிலங்களில் உள்ளதா? இதை முதன் முதலில் கையாண்ட அரசியல் கட்சி எது?

* த்சொ, த்சொ.





குட்டிக்கதை.

! தீக்குளித்தலின் மூலஸ்தானம் வியட்நாம். புத்தபிட்சுக்கள்தான் இதை ஆரம்பித்து வைத்தார்கள். இப்போது இந்த அநாகரிகம் தமிழ்நாட்டைத் தவிர வேறு மாநிலங்களில் இருப்பதாகத் தெரியவில்லை. இருந்திருந்தால் ஹெக்டே ராஜினாமாச் செய்தபோது கர்நாடகத்தில் ஒருவராவது தீக்குளித்திருக்க வேண்டுமே!

* கருப்பையா, சென்னை—5.

? அண்மையில் நீங்கள் படித்து ரசித்த ஜோக் ஏதாவது உண்டா?

! உண்டு; உண்டு! மந்திரி திருநாவுக்கரசு மஞ்சன(ல்) நீராட்டு விழாவுக்கு வருவதாகச் சென்னை நகரத்தின் சில இடங்களில் ஒட்டப்பட்டிருந்த போஸ்டர்களைப் படித்ததும் முதலில் வாய் விட்டுச் சிரித்தேன். பிறகு, இப்படியும் அப்பாவி மக்கள் இருக்கிறார்களே என்று நினைத்து, மனம் நொந்து போனேன்.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

கே. பிரதாப்சிங்,
73—A, காமராஜ் ரோடு,
அரகண்டநல்லூர் — 605 752.

# என்ன செய்கிறார்கள்?

* நட்சத்திர......



* ......எம். பிக்கள்.



* என்ன......?



......செய்கிறார்கள்?





அந்த வார்த்தையைக் கேட்கும் போதெல்லாம் உமாதேவிக்கு எரிச்சல் எரிச்சலாய் வந்தது. இப்போது அதை நினைத்துப் பார்க்கும் போதும் எரிச்சல்தான்.

'அம்மா, அம்மா, அம்மா.... அம்மா காப்பி போட்டுட்டியா....? அம்மா டிபன் ரெடியா.....? இன்னும் கொஞ்சம் சட்னி போடேன்.... சரிம்மா நேரமாச்சு, இனினிக்குக்குப் புறப்படறேன்....

ச்சே! எதற்கெடுத்தாலும் அம்மாதானா? அப்படியானால் பெண்டாட்டி என்று ஒருத்தி எதற்கு? வெறும் இரவு நேரத் தேவைக்கிற்கு மட்டும்தானா மனைவி?

சரி, அவர்தான் கிடக்கட்டும். இந்த மாமி யாருக்காவது புத்தி வேண்டாம்?

ஒரு குடும்பத்தின் மூத்த மருமகளாய் அடியெடுத்து வைத்த நாள் முதலாய், அந்தக் குடும்பத்தின் நலனுக்காகவே உழைத்து உழைத்துக் கரைந்து கொண்டிருக்கும் ஒரு மருமகளின் மிகச் சாதாரண உரிமைகளையும் உணர்ச்சிகளையும்கூடப் புரிந்து கொள்ளாத மாமியார் எதில்தான் சேர்த்தி?

ஆசைகள் இல்லாமலா வளர்ந்தேன்? கல்லூரியில் படிக்கும்போதுதான் எத்தனையெத்தனை கனவுகளைப் பத்திரமாகச் சேமித்து வைத்தேன். அதனாலல்லவோ, என் பாட்டியும் அம்மாவும் பன்னிரண்டு வயது மூத்தவரான என் தாய் மாமனைத்தான் நான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று வற்புறுத்திய போதும் அதையோர் மூர்க்கத்தனத்தோடு மறுத்து, தேனியிலிருந்து புறப்பட்டு வந்து மதுரையிலுள்ள பெரியம்மா வீட்டில் அடைக்கலம் புகுந்தேன்!

அப்போதுதான் இவர்கள் என்னைப் பெண் கேட்டு வந்தார்கள். 'குடும்பத்தின் மூத்த பையன். எல். எம். பி. படித்துவிட்டு டாக்டராக இருக்கிறான். சிறு வயதிலேயே அப்பாவை இழந்து வளர்ந்திருந்தாலும் பொறுப்பான பையன்.....' என்று என்னிடம் சொன்னார்கள். அந்த வார்த்தைகளின் அறிமுகமே எனக்குப் பிடித்துப் போயிற்று. 'சரி சரி!' என்று சம்மதித்தேன்.

ஆனாலும் என்னுள் ஒரு தயக்கம். பெரியம்மா வீட்டில் அவசரம் அவசரமாகத் தீர்மானிக்கப்பட்ட இந்தத் திருமணத்திற்கு அம்மாவும், பாட்டியும் சம்மதிப்பார்களா? அப்படியே சம்மதித்தாலும் திருமணச் செலவுகளுக்கு எங்கே போவது?

அப்போதுதான் இந்த மாமியார் எத்தனை இனிமையாகப் பேசினார்! 'சீர் செனத்தி என்று நாங்கள் எதையும் எதிர்பார்க்கவில்லை. உங்களால் முடிந்ததைச் செய்தால் போதும். பாவம், அப்பா இல்லாத குடும்பம் என்பது எங்களுக்குத் தெரியாதா? நானும் ஒரு விதவைதானே! அந்தக் கஷ்டங்கள் எனக்குத் தெரியும். அதனால் கல்யாணத்தைக்கூட ஊரையெல்லாம் அழைத்துச் செய்ய வேண்டாம்; எளிமையாகச் செய்து கொள்வோம். மதுரை மீனாட்சியம்மனைவிட வேறு என்ன சாட்சி வேண்டும்? அங்கே செய்தால் போதும்!' என்றான் மாமியார்.

என் பெரியம்மாவிடம் அவர் பேசிக் கொண்டிருந்த இந்தப் பேச்சை, நான் அடுப்பங்கரையிலிருந்து கேட்டபோது, அப்படியே சிலிர்த்துப் போனேன்.

நான் எதிர்பார்த்தது போலவே, அவளுடைய தம்பியைக் கட்டிக் கொள்ளவில்லையென்பதால் அம்மா சம்மதிக்கவில்லை. இருந்தாலும் என் விருப்பத்தைப் புரிந்து

# மாற்றங்களே தான் என் வாழ்க்கையா?”

## — கண்ணீர்க் கதை

கொண்ட பெரியம்மா அம்மாவிடம் மன்றாடி இருந்த நகைகளையெல்லாம் வாங்கிக் கொண்டு வந்தார். தானும் கொஞ்சம் பணம் போட்டு மொத்தம் இருபது பவுன் நகைகளை என் திருமணத்திற்காகத் தயார் செய்தார்.

திருமணமும் மிக எளிமையாக மீனாட்சியம்மன் சந்நிதியில் நடந்து முடிந்தது. அம்மா வரவில்லை என்றாலும் ஒரு நல்ல குடும்பத்தில்தான் வாழ்க்கைப்பட்டிருக்கிறேன் என்ற சந்தோஷத்தில் பூரித்துப் போனேன்!

**ஆ**யிற்று, திருமண ஆரவாரங்களெல்லாம் முடிந்து புது வாழ்க்கை ஆரம்பமாயிற்று. மாமியாரின் மனம் கோணாமல் நடந்து கொள்ள வேண்டும் என்று ஒவ்வொரு வேலையையும் நானே இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தேன்.

ஆனால் எத்தனை வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தாலும் என் மாமியாருக்குத் திருப்தியே ஏற்படாது போலும்! 'அது சொத்தை; இது சொள்ளை' என்று எப்போதும் நச்சரிப்புத்தான்.

ஒரு கூட்டுக் குடித்தனத்தில் பகலில் புருஷனோடு பேசக் கிடைக்கும் இரண்டொரு நிமிஷத் தனிமையைக்கூட அவர் பொறுத்துக் கொள்வதில்லை. 'அவனோடு என்ன வெட்டிப் பேச்சு! (வெட்டிப் பேச்சா அது!) பாத்ரூமுக்குள் காலை வைத்தாலே வழுக்குகிறது. நான் விழுந்து கை, கால்களை ஒடித்துக் கொண்டு படுத்துத் தொலைத்துவிட்டால் நல்லதுஎன்றுநினைக்கிறாளோ?' இப்படியெல்லாம் குத்தல் பேச்சுக்கள்.... கூனிக் குறுகிப் போவேன்.

'நான் என்ன பாவம் செய்தேன்? ஏன் இப்படியெல்லாம் உங்கள் அம்மா என்னைப் புண்படுத்துகிறார்கள்?' என்று ஓர் இரவு நேரத் தனிமையில் அவரிடம் நான் மனம் விட்டுக் குமுறி அழுதபோது அவராவது என்னை ஆறுதல்படுத்தினாரா? இல்லை. 'என்ன உங்கள் அம்மாவா? எனக்குத்தான் அம்மாவா? உனக்கு மாமியார் இல்லையா? எப்படி அப்படிச் சொல்லத் துணிந்தாய்? கொஞ்சம் கொஞ்சமாக எங்களைப் பிரித்து வைக்கப் பார்க்கிறாயா? இனியும் நீ இங்கே இருக்காதே.....புறப்படுஉன்பிறந்தவீட்டுக்கு' என்று அந்த அர்த்த ராத்திரியிலேயே அல்லவா மூர்க்கத்தனமாக விரட்டியடித்தார்.

இப்போது பத்தாவது படித்துக் கொண்டிருக்கும் என் மகன் அப்போது பிறந்து இருபத்தேழு நாட்களே ஆன பச்சைக் குழந்தை. அந்த நிலையில்தான் என்னை அர்த்த ராத்திரியில் என் பெரியம்மா வீட்டுக்குத் துரத்தியடித்தார் அவர்!

பிறகு ஒரு வழியாகச் சமாதானமாகி வந்த பிறகும் மாமியாரின் குத்தல் பேச்சுக்கள் குறையவில்லை. இவரும் வாய் திறந்து அம்மாவை ஒரு வார்த்தை சொல்வதில்லை. சரி, அதுதான் ஒழியட்டும். இவராவது என்னிடம் வாஞ்சையோடு நடந்து கொண்டாரா? என் மெல்லிய உணர்வுகளைப் புரிந்து கொண்டாரா என்றால் அதுவும் இல்லை. எதிலும் ஓர் இயந்திரத்தனம்தான். மனைவி என்பவள் ஓர் இயந்திரம்போலவா, ஸ்விட்ச்போட்டால் இயங்குவதற்கு? மற்ற நேரங்களில் மௌனமாய்க் கிடப்பதற்கு? ஒரு டாக்டரான இவருக்கு ஏன் அது புரியவில்லை? எனக்குச் சந்தேகம் வரலாயிற்று.....

பலரையும் நான் துருவித் துருவி விசாரித்த போது, இவருக்கு ஏற்கெனவே ஒரு பெண்ணுடன் திருமணம் நடந்துவிட்டதென்றும், அந்தப் பெண்ணின் பெற்றோர் அத்திருமணத்தை ஏற்றுக்கொள்ளாததால் இருவரையும் பலாத்காரமாகப் பயமுறுத்திப் பிரித்து விட்டார்கள் என்றும் அரசல்புரசலாய் தெரிய வந்தது. தனிமையில் இவரிடம் கேட்ட போது இவரும் அதை ஒப்புக் கொண்டு விட்டார். அப்போதுதான், என் திருமணத்தில் காட்டிய எளிமையும், அவசரமும் முந்தைய திருமணத்தை மறைப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட கருவிகள் என்று எனக்குப் புரிந்தது. இருந்தாலும் என்ன செய்வது? மனத்தைத் தேற்றிக் கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழி புலப்படவில்லை.....'

அதற்குள் இப்போது ஒன்பதாவது படிக்கும் மகளும் பிறந்துவிட்டதால், அவற்றையெல்லாம் மறந்துவிட்டுச் சகஜ வாழ்க்கைக்குத் திரும்பிவிட்டேன்.' தனது வருமானம், குடும்பச் சொத்துக்கள்..... என்று எது பற்றியும் என்னிடம் அவர் பேசுவதில்லையென்றாலும், 'டாக்ஸியும், லாரிகளும் வாங்கினால் நல்ல வருமானம் கிடைக்கும்' என்று அவர் என் நகைகளைக் கேட்டபோது பதில் பேசாமல் கழற்றிக் கொடுத்தேன். பிறகு அவற்றில் கிடைத்த வருமானத்தில் என்னிடம் வாங்கிய நகைகளைத் திரும்பச் செய்து கொடுத்த

''கிழக்கே ஓர் உலகம்'' — வாஸந்தி கட்டுரை அடுத்த இதழில்......

போதும் பேசாமல் வாங்கிக் கொண்டேன். அப்போதும் குடும்ப வருமானம் பற்றி அவர் என்னிடம் மூச்சுவிட்டதுகூட இல்லை. நானும் அவர் இருக்கும்போது நாம் ஏன் கவலைப்பட வேண்டும் என்று பேசாமல் இருந்துவிட்டேன்.

ஆனால் காலத்துக்கு அது பொறுக்கவில்லையோ? ஒரு நாள் லாரியில் சென்று கொண்டிருந்த அவர் உளுந்தூர்ப்பேட்டைக்கு அருகில் விபத்துக்குள்ளாகிப் பிணமாகத்தான் திரும்பி வந்தார். ஆஸ்பத்திரியில் போஸ்ட் மார்ட்டம் முடிந்து வந்த அவர் பிணத்தை மாமியாரும் மைத்துனர்களும் வீட்டுக்குக் கூடக் கொண்டு வரவில்லை. என்னையும் போய்ப் பார்க்க விடவில்லை. அப்படியே இறுதிச் சடங்குகளை முடித்துவிட்டார்கள்.

'அண்ணி! போனது போய்விட்டது. இனி நீங்கள் கவலைப்பட்டு ஏதும் ஆகப் போவதில்லை. எல்லாவற்றையும் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். கவலைப்படாதீர்கள்....' என்று மைத்துனர்களெல்லாம் ஆறுதல் சொன்னபோது, என் துக்கமும் கொஞ்சம் மறந்துதான் போயிற்று.

ஆனால் அதுவும் நீண்ட நாள் நீடிக்கவில்லை. என்னிடம் இதமாகவும் ஆறுதலாகவும் பேசிய மைத்துனர்கள் என் பெயரில் இருந்த ஒரு லாரியின் மேல் கடன் சுமைகளைச் சுமத்தி விட்டார்கள். அதை நான் தெரிந்து கொண்ட போது, குடும்பத்தைப் பிரித்துக் கொண்டு போய்விட்டார்கள். வேறு வழியின்றி நானும் லாரியைக் கடனுக்காக விட்டுவிட வேண்டியதாயிற்று: வேறு சொத்துக்கள் எதையும் எனக்கு அவர்கள் தராவிட்டாலும், நல்ல வேளையாக இருபது பவுன் நகையாவது நம்மிடம் மிஞ்சியதே என்று ஆறுதல் அடைந்து ஒரு புது வாழ்க்கையைத் துவக்கினேன்.

அப்போதுதான் முன்பே கணவருக்குப் பரிச்சயமான பக்கத்துத் தெரு குடும்பம் ஒன்று என்னிடம் மீண்டும் இதமாகப் பழக ஆரம்பித்தது. 'கவலைப்படாதே. எதிர் காலத்தில் என் மகனுக்கு உன் மகளைக் கட்டி வைத்து விடலாம். அவனே உன் குடும்பத்தைப் பார்த்துக் கொள்வான். இப்போது கௌரவமாக வாழ, இருக்கும் கொஞ்சம் பணத்தை வட்டிக்குக் கொடுத்தால் போதும்' என்றார்கள்.

'எனக்கு யாரையுமே தெரியாதே! இந்த நிலையில் நான் வட்டிக்குப் பணம் கொடுத்து வாங்குவது முடிகிற காரியமா?' என்றேன்.

'அது பற்றியெல்லாம் உனக்கென்ன கவலை? பி.பி.ஏ. படித்திருக்கும் எங்கள் மகனுக்கு — அதுதான் உன் மருமகனுக்குத் தெரியாதா? எல்லாம் அவன் பார்த்துக் கொள்வான்....' என்றார்கள்.

நானும் அவர்களைப் பூரணமாக நம்பினேன். அந்தப் பையனும் எங்கள் வீட்டுக்கு வந்து பணம் கொடுக்கல் வாங்கலில் உதவினான். கணக்கு வழக்குகளில் சுத்தமாக இருந்தான். அதனால் முழுப் பொறுப்பையும் அவனிடமேவிட்டுவிட்டேன். உறவினர் ஆதரவில்லாத என் மகனும், மகளும்கூட அவனிடம் ''மாமா, மாமா!'' என்று பாசத்தைப் பொழிய ஆரம்பித்தனர். ஒன்பதாவது படிக்கும் என் மகளின் பிஞ்சு மனத்திலும் அவன்தான் தன்னைக் கட்டிக் கொள்ளப் போகிற எதிர்காலக் கணவன் என்ற எண்ணம் மெல்ல மெல்ல வேரூன்ற ஆரம்பித்தது.

இந்த நிலையில்தான் ஒருநாள் அந்தப் பையனுக்கு ரயில்வேயில் வேலை வாங்குவதற்காக லஞ்சம் கொடுக்கப் பத்தாயிரம் ரூபாய் தேவை என்று சொன்னார்கள். அந்த வேலை மட்டும் கிடைத்துவிட்டால் பிறகு கவலையே இல்லை என்று நானும் நினைத்தேன். அதனால் அவர்கள் கேட்டதும் சிறிதும் யோசிக்காமல், என்னிடமிருந்த பதிமூன்று பவுன் நகைகளையும் அவனிடம் எடுத்துக் கொடுத்து, 'இதை அடகு வைத்து, அந்த வேலையை எப்படியாவது வாங்கிக் கொண்டு விடு.....' என்று ஓர் எதிர்கால நம்பிக்கையோடு சொன்னேன்.

அவனும் அதை வாங்கிக் கொண்டு போய் என் பேரிலேயே அடகு வைத்துப் பணம் பெற்றுக் கொண்டு சென்றான். சென்றவன் சென்றவன்தான். என் வீட்டுப் பக்கம் திரும்பக்கூட இல்லை. என்ன காரணம் என்று யோசித்து அவன் வீட்டுக்கே சென்ற போது, 'அவன் இனி உன் வீட்டுக்கு வரமாட்டான். ஏன் அவன் வராமல் உன்னால் இருக்க முடியவில்லையோ.....' என்றெல்லாம் பேசக்கூடாத வார்த்தைகளைப் பேசினார்கள். பதில் பேச முடியாமல் திரும்பி விட்டேன்.

இப்போது அடகு வைத்த பேங்கிலிருந்து வட்டி கட்டச் சொல்லி எனக்கு நோட்டீஸ் மேல் நோட்டீஸாக வந்து கொண்டிருக்கிறதே..... என்னிடம் ஏது பணம்? குடியிருக்கும் வீட்டுக்கு வாடகைகூடக் கொடுக்க முடியாமல் — அடுத்த வேளைச் சோற்றுக்கே என்ன செய்வதென்று தெரியாமல் தவிக்கும் என்னிடம் ஏதம்மா பணம்?

இளமையில் கனவுகளை நம்பி, பிறகு கணவனை நம்பி, மைத்துனர்களை நம்பி, நண்பர்களை நம்பி..... ஒவ்வோர் இடத்திலும் ஏமாற்றங்களையே சந்தித்துக் கொண்டிருக்கும் என்னை ஏன் இன்னும் சோதிக்கிறாய்? இனி நான் யாரைத்தான் நம்புவது? உன்னை நம்பித்தானே ஆயிரமாயிரம் கனவுகளோடு உன் சந்நிதியில் திருமணம் செய்து கொண்டேன். நீயும் என்னைக் கைவிட்டுவிட்டால் எனக்கும் என் குழந்தைகளுக்கும் என்னதான் வழி தாயே.....?

வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் தனது கடந்த கால வாழ்க்கையை நினைத்து நினைத்து இப்படிக் குலுங்கிக் குலுங்கி அழுவதைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை முப்பத்தெட்டு வயது முடிந்துவிட்ட உமா தேவிக்கு. இரண்டு குழந்தைகளுடன் நிராதரவான ஓர் இந்திய விதவையால் கடவுளிடம் முறையிட்டு அழுவதைத் தவிர வேறு என்னதான் செய்ய முடியும்?

**— இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும், படமும்: **மணி**

# வானதி வழங்கும் தெய்வீக நூல்கள்

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வர ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் அருள்வாக்குகள்**

| நூல் | ரூ. பை. |
|---|---|
| தெய்வத்தின் குரல் (முதல் பகுதி) — தொகுத்தவர்: ரா. கணபதி ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் அருள் வாக்குகள் | 45.00 |
| தெய்வத்தின் குரல் (இரண்டாம் பகுதி) | 55.00 |
| தெய்வத்தின் குரல் (மூன்றாம் பகுதி) | 45.00 |
| தெய்வத்தின் குரல் (நான்காம் பகுதி)— புதிய நூல் | 55.00 |
| ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் பொன்மொழிகள் | 6.00 |
| தெய்வ வாக்கு (ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்ரீசங்கராச்சார்ய சுவாமிகளின் அருள்வாக்கு) அழகிய லெமினேஷன் அட்டைப் படத்துடன் கூடியது | 20.00 |
| ஞானவழி | 4.50 |
| இந்து தர்மங்கள் | 7.00 |
| நல்வழி | 4.50 |
| குருசிஷ்ய பரம்பரை — சுவாமிநாத ஆத்ரேயன் | 5.00 |
| திருப்புகழ் விரிவுரை (திருப்பரங்குன்றம், திருச்செந்தூர்) திருமுருக கிருபானந்த வாரியார் | 40.00 |
| திருப்புகழ் விரிவுரை (பழநி) ,, | 30.00 |
| திருப்புகழ் விரிவுரை (சுவாமிமலை) ,, | 12.00 |
| கந்தரநுபூதி ,, | 10.00 |
| வாரியார் வாக்கு ,, | 5.00 |
| பிள்ளையார் பெருமை ,, | 6.00 |
| கந்தவேள் கருணை ,, | 20.00 |
| வாரியார் விரிவுரை விருந்து ,, | 15.00 |
| வாரியார் வழங்கும் சிந்தனைச் செல்வம் ,, | 15.00 |
| தவம் ,, | 3.50 |
| பெண் குலப் பெருமை | 20.00 |
| சிவனருட்செல்வர் (பெரிய புராணம்) ,, | 22.00 |
| திருவாசகத்தில் அருளியல் டாக்டர் திருமதி ராதா தியாகராஜன் ,, | 25.00 |
| காரியசித்தி மா. இரத்தின சபாபதி பிள்ளை ,, | 8.50 |
| அங்கயற்கண்ணியின் அற்புதங்கள் வி. என். சிதம்பரம் | 12.00 |
| திருமகளே வருக! (படங்களுடன்) அரங்க கிருஷ்ணன் | 10.00 |
| ஐயப்பன் தத்துவங்கள் வி.என். சிதம்பரம் (வரலாறும் தினசரி சொல்லக் கூடிய சரணங்கள் ஐயப்பன் பாடல்களுடன் கூடியது) | 7.00 |
| தெய்வ அருட் பாடல்கள் — நெமிலி எழில்மணி | 3.00 |
| திரிபுரசுந்தரியின் திருவிளையாடல்கள் | 4.00 |
| தெய்வீகத் தமிழ் அமுதம் (பாராயணப் பாடல்கள் தொகுப்பு) | 5.00 |
| இராமாயணம் மூதறிஞர் இராஜாஜி | 20.00 |
| மகாபாரதம் ,, | 20.00 |
| கண்ணன் காட்டிய வழி ,, | 10.00 |
| பஜகோவிந்தம் ,, | 4.00 |
| முதல் மூவர் ராஜாஜி சோமு | 2.00 |
| திருப்பாவை — சாண்டில்யன் உரை | 2.00 |
| திருவெம்பாவை — ஆர். வி. உரை | 2.00 |
| பொன் மழை (கனகதாரா ஸ்தோத்ரம்) கவிஞர் கண்ணதாசன் | 3.50 |
| அம்பிகை அழகு தரிசனம் | 7.50 |
| அர்த்தமுள்ள இந்துமதம் I II III (1 set) ,, | 18.00 |
| பகவத் கீதை (விளக்கவுரை) ,, | 8.00 |
| கண்ணதாசன் கதம்பம் ,, | 15.00 |
| பாடிக் கொடுத்த மங்கலங்கள் (புதிய நூல்) ,, | 16.00 |
| திருவிளையாடல் புராணம் பேரூரான் | 15.00 |
| இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது? பி.சி.கணேசன் | 4.50 |
| கடவுள் நம்பிக்கை ஏன் வேண்டும்? ,, | 10.00 |
| இந்துமதச் சிந்தனைகள் ,, | 7.50 |

**V. P. P. யில் பெறக் கடிதம் எழுதுங்கள். V. P. P. தபால் செலவு தனி. வானதி ஷோரூமுக்கு விஜயம் செய்க. ஆயிரக்கணக்கான தமிழ் நூல்களை நேரில் பார்த்து வாங்கலாம்.**

**வானதி 1986 ஆம் ஆண்டு விலைப்பட்டியலுக்கு எழுதுக!**

**விபரங்களுக்கு:**




# வானதி பதிப்பகம்

13. தீனதயாளு தெரு தி.நகர். சென்னை-17.

**போன் நெ: 442810. பின்கோட்: 600 017.**



• பள்ளிக்கான இடத்தில்
புதிதாக முளைத்திருக்கும் குடிசைகள்.

• ராஜாமணி.

# அரசுக்கே 'தண்ணி' காட்டும் வீட்டுவசதி வாரியம்!

மதுரை அண்ணாநகருக்குள் சென்று தமிழ்நாடு ஹவுஸிங் போர்டு பற்றி வாய் திறந்தால், ''வயிற்றெரிச்சலைக் கொட்டிக் காதீங்க'' என்றுதான் பேச ஆரம்பிப்பார்கள். அந்த அளவுக்குக்கொதித்துப்போயிருக்கிறார்கள், அண்ணாநகர் வாசிகள். அதுவும் இருபதாண்டு காலக் கொதிப்பு!

1966 லேயே, வைகையாற்றின் கரையோரமாக 'புது ஏரியா' உருவாகி, அப்போது ஒரு மனை விற்கப்பட்டது ஐயாயிரம் ரூபாய்க்கு. இது தவிர அண்ணா நகர் வாசிகளிடம் அப்போதே, 'பள்ளி மற்றும் இதர வசதிகள்' ஏற்படுத்தித் தர 7000 ரூபாய் (ஒவ்வொரு வீட்டுக்காரரிடமும்) வசூலித்திருக்கிறது ஹவுஸிங் போர்டு. தண்ணீர் வசதி, ஸ்கூல் வசதி எல்லாவற்றையும் நம்பி அண்ணா நகர் மனைகள் மளமளவென்று விற்பனையாகிவிட்டன. வீடுகள் அடுத்தடுத்துக் கட்டப்பட்டன. ஒரு புதுக் காலனி ஏரியாவாக அண்ணா நகர் உருவாகிவிட்டது.

ஆனாலும் அண்ணா நகருக்கான 'பிளானி'லேயே பள்ளி மற்றும் விளையாட்டு மைதானத்திற்காக ஒதுக்கப்பட்ட 4.25 ஏக்கர் நிலம் மட்டும் அப்படியே கிடந்தது. பள்ளிக்கான எந்தவித ஏற்பாடுகளும் இல்லை.

இதனால் காலனிகாரர்களுக்கும் அவர்களின் 1500 குழந்தைகளுக்கும் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை ஹவுஸிங் போர்டில் எடுத்துச் சொல்ல, அவர்களோ, 'விரும்பினால் தனியார் ஒரு பள்ளியை ஆரம்பித்துக் கொள்ளலாம்' என்று விளம்பரம் கொடுத்தனர். ஆனால் இதில் ஒரு சிக்கலையும் ஹவுஸிங் போர்டுஏற்படுத்திவிட்டது. அதாவதுகாலனிகாரர்களுக்கு முன்பு ரூ 5000 க்கு மனை ஒதுக்கிய ஹவுஸிங் போர்டு இப்போது பள்ளிக்கு மனை ஒன்றுக்கு 14,000 கேட்டது! அடுத்த விளம்பரத்தில் இதை 17000 என்று உயர்த்தியது! இத்தனை விலை கொடுத்து நிலம் வாங்கிப் பள்ளி ஆரம்பிக்க யாரும் முன்வரவில்லை.

இடையில் அந்த நிலத்தையும் கூறு போட்டு மனைகளாகத் தனி நபர்களுக்கு விற்று விட நடந்த முயற்சியைக் காலனி வாசிகள் விழிப்புணர்ச்சியுடன் இருந்து அரசு உத்தரவு பெற்றுத் தடுத்துவிட்டார்கள்.

1983 நவம்பர் மாதம் மதுரை, அண்ணா நகர் வாசிகள் 'அறிஞர் அண்ணா நகர் அறக்கட்டளை' என்ற அமைப்பை உருவாக்கி அதன் பிரதிநிதிகள் (செயலாளர்: வி. ராஜாமணி) முதல்வரையே சந்தித்துத் திரும்பினார்கள். அதன் விளைவு, 'தனியார் யாரும் பள்ளி துவக்க வேண்டாம்; மாநகராட்சியோ அரசோ பள்ளியை உருவாக்கும்' என்று அரசு ஆணை வீட்டு வசதி வாரியத்துக்கு வந்தது. மாநகராட்சி கைவிரித்துவிட, அரசு பள்ளியை ஆரம்பிக்க முன்வந்தபோது வாரியம், மனை 60,000 ரூபாய் என்ற விலைக்கு அரசு எடுத்துக் கொள்ளுமா? என்று கேட்டிருக்கிறது!

இப்படி பஸ்மாசுரன், சிவபெருமான் தலையிலேயே கை வைத்த கதையாக, வாரியமானது தமிழக அரசுக்கே தண்ணி காட்டவும், அரசும் பள்ளி தொடங்கும் திட்டத்தைக் கைவிட, இருபது வருஷங்களாக நிலம் தரிசாகக் கிடக்கிறது!

இப்படி தானும் செய்யாமல் பிறரையும் செய்யவிடாமல் ஹவுஸிங் போர்டு அட்டகாசம் பண்ண, இடையில் பள்ளிக்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் புல குடிசைகள் முளைக்க ஆரம்பித்துவிட்டன. சேரிகள் உருவாகி அவற்றில் ஆளும் கட்சி, எதிர்க் கட்சிக் கொடிகளும் பறக்க ஆரம்பித்துவிட்டால் அப்புறம் அவர்களை யாரால் காலி பண்ணச் சொல்ல முடியும்? பள்ளிக்கூடம் பகற் கனவாகித்தானே போகும்?

நமது அரசின் கல்விக் கண் திறக்கும் முயற்சி இந்த லட்சணத்தில் இருக்கும்போது 21 ம் நூற்றாண்டாவது, அதற்கேற்ற கல்வித் திட்டமாவது? ஹூம்.

—ஆசி

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

### வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






GLL/6806

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதினின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.




உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

"மிஸ்டர் சீனுவாசன் இருக்கிறாரா?"

"இன்னிக்கு அவர் லீவு."

மறுநாள்.

"மிஸ்டர் சீனுவாசன் இன்று ஆபீசுக்கு வந்தாரா?"

"வந்தார். டிபார்ட்மெண்ட் வேலையாக வெளியில் போய் இருக்கிறார். வர நேரமாகும். நேற்றுக்கூட நீ..... நீங்கதானே போன் பண்ணினீங்க."

"ஆமாம்."

"ஏதாவது அவசரமென்றால் சொல்லுங்களேன். அவர் வந்ததும் தெரிவிக்கிறேன்."

# ஒரு வாரமாக

"மன்னிக்கவும். அவரிடம்தான் பேசணும்."

மூன்றாம் நாள்.

"மிஸ்டர் சீனுவாசன் இருக்...."

"ஸாரி. இன்னிக்கு அவர் செகண்ட் ஷிப்டிலே வருவார்."

தொடர்ந்து நான்கு, ஐந்து, ஆறு நாட்களாக அவள் போன் பண்ணினாள். சீனுவாசனைப் பிடிக்க முடியவில்லை. ஏதாவது ஒரு சாக்கில் அவர் தப்பித்துக் கொண்டே இருந்தார்.

ஹெட் கிளார்க் மாதவ மூர்த்திக்கு அலுவலக வேலையே நெட்டி முறிக்கும். 'நாயைக் கண்டால் கல்லைக் காணோம்' என்ற கதையாய், சீனுவாசனைப் பார்க்கும்போது 'போன் சம்பவம்' ஞாபகம் வராது. 'போன் சம்பவம்' நினைவுக்கு வரும்போது, சீனுவாசன் ஸீட்டில் இருக்கமாட்டார்.

"சரவணன்...."

"என்ன சார்?"

"சீனுவாசன் ஸீட்டுக்கு வந்ததும் எனக்குச் சொல்லுங்களேன். அவரிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும்."

விடாக்கண்டன் அந்தக் கிளார்க். "அப்படி என்ன சார் முக்கியம்?" என்று கிளறினான்.

"யாரோ ஒரு பெண், உறவுமுறையாகக் கூட இருக்கலாம். யாரென்று தெரியல்லே. ஒருவாரமா அவரை போனில் துரத்துகிறாள்."

"யாரென்று கேட்கிறதுதானே?"

"சொல்ல மாட்டேன்கிறாள்!" மாதவ மூர்த்தியின் புருவ மேடுகள் விஷமத்துடன் நெளிந்தன. "ஏதாவது லூஸ் கேஸாக இருக்கும் போல."

"எக்ஸாக்ட்லி: யூ ஆர் கரெக்ட், சார். மனுஷர் அப்படிப்பட்ட ஆள் மாதிரிதான் தோணுது. இந்த வயசிலும் பவுடர் என்ன, சஃபாரி டிரஸ் என்ன, நரை முடிக்கு 'டை' என்ன.....

"ஆமாம் சார். அவரோட பார்வையே சரி இல்லே. என் கையை 'டச்' பண்ணணும் என்றே பென்சில் இரவல் கேட்பார் சார்"

டைப் அடித்த கடிதத்தைக் கொடுக்க வந்த கல்யாணிக்குப் புதுக் கவிதை மோகம். புகாரையும் அந்தப் பாணியிலேயே சொன்னாள்.

"இஸிட்?"

"போன மாசம்னு நினைக்கிறேன்...." என்று ஆரம்பித்தாள் மாதவி. "சீனுவாசன்



தமிழினியன்

சாரோட ஒய்ஃப் மாதிரமா, தடியா இருப்பாங்க. எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால், ரம்பா தியேட்டரிலே யாரோ ஒல்லியாய், சிவப்பா ஒரு பெண்ணோட சினிமாப் பார்த்துட்டு இருந்தார் சார்."

"இன்னொருவிஷயம்தெரியுமோ?மனுஷர் அடிக்கடி ஷிப்ட் மாறி வருவதுகூட இப்படி வீட்டுக்குத் தெரியாமல் சின்ன வீடு போகத் தானாம்.

"அடே அப்பா. மனுஷர் உண்மையாய் இருக்கிறார். இப்போதல்லவா தெரிகிறது வண்டவாளம்!" கண்ணாடியைக் கழற்றி வைத்துவிட்டு இமையோரத்தை உற்சாகத்துடன் சொறிந்தார், மாதவ மூர்த்தி.

அலுவல் ஓய்ந்து, பஸ்ஸில் வீட்டுக்குப் பயணம்.

"வணக்கம் மிஸ்டர் மாது. உங்களைத்தான் பார்க்கணும் என்றிருந்தேன்!" பின்புற வீட்டிலிருந்து கைகூப்பினார், பால்ய சிநேகிதர் பாலசுந்தரம்.

"என்ன விஷயம்?" என்று புன்னகை



புரிந்தார், மாதவ மூர்த்தி.

"பையனுக்குக் கல்யாணம்."

"பெண் நிச்சயமாயிட்டுது இல்லையா?"

"நைண்டி பர்சண்ட் ஆனமாதிரிதான்.

"அதென்ன நைண்டி பர்சண்ட்."

"எல்லாம் ஒத்து வந்துவிட்டது. பெண்ணுக்கு நான் கேட்ட பதினைந்து சவரனிலே, பத்து இப்போது போடுவார்களாம். மீதியை ஆறு மாதம் கழித்துச் செய்கிறோம்" என்கிறார்கள்.

"அதுக்கு?"

"யோசித்துச் சொல்வதாகச் சொல்லி இருக்கிறேன். ஆனால் பெண்ணோட அப்பா ரொம்பக் கௌரவமானவர். நல்ல குடும்பம். சொன்ன பிரகாரம் பொறுப்பாகச் செய்வார் என்ற நம்பிக்கை இருக்கிறது."

"பின்னே என்ன, பேஷாகச் செய்ய வேண்டியதுதானே? யார் அந்த ஆள்?"

"சொன்னால் ஆச்சரிப்படுவீர்கள். உங்கள் கம்பெனியில் உங்களோடவே வேலை செய்யும் சீனுவாசன்தான்."

"என்ன சீனுவாசன் மகளா!" தேள் கொட்டியதுபோல் பதறினார், மாதவமூர்த்தி.

"அவரையா பொறுப்பான மனிதர் என்றீர்கள்?"

"ஏன் நீங்கள் கேட்பதைப் பார்த்தால் ஏதோ சிக்கல் இருக்கும் போலிருக்கே."

"பெரிதாய் ஒன்றுமில்லை. சீனுவாசன் நல்லவர்தான். ஆனால் கொஞ்ச நாட்களாக அவர் போக்கு சரி இல்லை. பெண் சபலம் பிடித்து அலைகிறார்.

"நிஜமாகவா?"

"அவரை ஒரு வாரமாய் ஒரு பெண் போனில் துரத்துகிறாள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்."

"ஐ ஸி...."

**வீ**ட்டுக்குள் நுழையும்போதே கால் இடறிற்று சீனுவாசனுக்கு.

அங்கு நிலவிய அமைதியைக்கண்டுதிகைத்தார் அவர்.

"ஏன் என்ன நடந்தது.....ஏன் எல்லோரும் ஒரு மாதிரியாய் இருக்கீங்க. ஏம்மா, சாந்தி நீ ஏன் என்னவோ போல இருக்கிறாய். அழுதாயா?"

"உம்."

# சிட்டி

## நோட்ஸ்

"**ம**துரையைச் சுத்தின கழுதையும் ஊரை விட்டுப் போகாது" — இதை உற்சாகத்துடன் சொல்வதில்தான் மதுரைக்காரர்களுக்கு என்ன குஷி? நடு மைய்மாய் கோவில். சுற்றிச் சுற்றிக் கட்டம் போட்ட மாதிரி தெருக்கள். சைக்கிளில் சுமாரான வேகத்தில் போனால் ஒரு மணி நேரத்தில் ஒரு 'ரவுண்ட்' போய் வந்துவிடக் கூடிய 'கிராமீயமான' நகரம் தான் மதுரை. மதுரையை விட்டு கொஞ்சம் நகர்ந்தால் 5 கி.மீ. போனால் அந்தப் பக்கம் அழகர் மலை. (அங்குதான் என்னென்ன போஸ்களில் சிலைகள்?) இந்தப் பக்கம் 5 கி.மீட்டரா? நெகிழ்ந்தபடி சூலமங்கலம் சகோதரிகள் பாடும் 'திருத்தணி மலையில் எதிரொலிக்க' முருகன் சிரித்த திருப்பரங்குன்றம். பக்கங்களில் யானை மாதிரி, பசு மாதிரியான போஸ்களில் கிடக்கும் யானை மலை, பசு மலை. ஒன்றரை மணி நேரம் பிரயாணம் போனால் வந்துவிடக்கூடிய வைகை அணை. நிறைய சினிமாக் காதலர்கள் முன்பு கண்ணை மூடிப் படுக்கையில் சாய்ந்தவுடன் கனவில் 'டூயட்' பாட குடுகுடுவென்று வந்து விடுகின்ற இடம். சோழவந்தான் பக்கம் போனால் பச்சையை மடியில் கொள்ளை கொள்ளையாய் கட்டிக் கொண்டிருக்கிற மாதிரியான பிரதேசம். இதைவிட உள்ளூரிலேயே இருக்கிற தெப்பக் குளம். அப்துல் ரகுமான் "மூன்றாவது மார்பகமாக" வர்ணித்த அதன் நடுவிலுள்ள மண்டபம். காளிமுத்துவின் முரட்டுத் தமிழ் தூண்களில் எதிரொலிக்க இன்னமும் திருமலைநாயக்கர் ஒலி—ஒளி காட்சி நடக்கிற மஹால்; (காளிமுத்து சற்று சந்தோஷப்படலாம்) மௌனமாய் காந்தி ஞாபகங்களைப் புதைத்துக் கிடக்கும் காந்தி மியூசியம்; தெற்குக் கோபுரத்தில் உள்ளே ஏறினால் விசாலமாய் காட்சி கிடைக்கும் மீனாட்சியம்மன் கோவில்; நுணுக்கம் பரப்பின சிலைகள்; ரோட்டோரமாய் விற்கிற 'ஜில்ஜில் ஜிகிர்தண்டா' வண்டிகள்; சலசலப்பாய் இருக்கிற டவுன் ஹால் ரோட்டில் ஒரு வாசனை மாதிரி புல்லாங்குழல் இசையை நழுவ விடுகிற பார்வையற்ற புல்லாங்குழல் வியாபாரி—இப்படி மதுரைக்கு பல விசேஷங்கள். விசேஷம் மட்டும்தானா?

* மதுரை 'சிலப்பதிகார' ஊரில்லையா? அதையொட்டி ஊருக்கு தள்ளி இருக்கிற இடத்தின் பெயர் கோவலன் பொட்டல். கோவலனை வெட்டின இடம் என்கிறார்கள். சில வருஷங்களுக்கு முன் ஓர் ஆய்வுக் கோஷ்டி வந்து ஒரு குறிப்பிட்ட ஆழம் வரை தோண்டினபோது இடறியவை சில எலும்புக் கூடுகள். எந்த எலும்பு கோவலனுடையது? சிலர் மூளையைக் குழப்பிக் கொண்டார்கள்? குழம்பலாமா? குழம்புகிற விஷயமா இது? தேடுகிற கோஷ்டி இன்னும் கொஞ்சம் ஆழத்தில் அழுந்தித் தோண்டியிருந்தால் கோவலனே மண்ணை ஓர் உதறு உதறினபடி

''ஏன்?''

''நான் சொல்றேன்'' என்று வந்தாள் அம்மா — சீனுவாசனின் மனைவி. ''பிள்ளை வீட்டுக்காரர்கள் தகவல் சொல்லியிருக்கிறார்கள்.''

''என்னவாம்?''

''அவர்களுக்கு நம் சம்பந்தம் பிடிக்கல்லே யாம்.''

''ஹூம்....'' விரக்தியுடன் சிரித்தார் சீனுவாசன். ''இந்து சவரனுக்குக்கூட நம்ப மாட்டேன்கிறார்களே.... சே... என்ன மனிதர்கள்....'' நீளமான பெருமூச்சில் விம்மித் தணிந்தது அவரது மார்பு.

அலுவலகத்தின் போன் ஒலித்தது.

''மிஸ்டர் சீனுவாசன் இருக்கிறாரா?'' அதே பெண் குரல்.

''ஓ.... இருக்கிறாரே....'' என்று ஏகத் தாளத்துடன் பதில் சொன்ன மாதவமூர்த்தி ''மிஸ்டர் சீனுவாசன்..... உங்களுக்குப் போன்'' என்று கொடுத்தார்.

''சீனுவாசன் பேசுகிறேன். யார்.... அமுதாவா?''

''ஆமாம் அங்கிள்.''

''நீ ரொம்பக் கொடுத்து வச்சவள் அம்மா. நான் அந்தக் கம்பெனி மானேஜர் கிட்டே பேசிட்டேன். உனக்கு அப்பாயிண்ட்மெண்ட் போட்டுத் தர ஒப்புத்துக் கொண்டார். ஆனாலும், அக்கம்பெனியின் 'நம்பர் ஒன்' வேறொருத்தர் இருக்கிறார். அவரும் எனக்குப் பரிச்சயம்தான். அவர் மெட்ராஸிலிருந்து நாளைக்குத்தான் வருகிறார். சம்பளத்தைத் தீர்மானித்து, ஆர்டரில் அவர் தான் கையெழுத்துப் போடணும். நாளைக்கு நீயும் வந்தாயானால், இரண்டு பேருமாகப் போய், ஆர்டரை வாங்கி வந்துவிடலாம். நாளைக்கு இதே நேரத்துக்கு வந்து போன் பண்ணு. சரிதானே.....''

''ரொம்பத் தேங்க்ஸ் அங்கிள்.''

சீனுவாசன் பேசி முடித்ததும், மாதவமூர்த்தி கேட்டார். ''யார் அந்தப் பெண்?''

''என் ஃபிரண்டோட மகள் சார். பாவம். லாரி விபத்திலே அந்த மனுஷன் இறந்துவிட்டான். இந்தப் பெண்ணும் இவளோட அம்மாவும்தான். நிராதரவாயிட்டாங்க. எப்படியாவது அந்தப் பெண்ணுக்கு ஒரு வேலை

எழுந்து புராண பாஷையில் ''ஐயன்மீர்'' என்று குசலம் விசாரிக்கக் கூடும். இன்னும் தேடினால் கண்ணகி கழற்றி எறிந்த சமாச் சாரங்கள்கூட கிடைக்கக் கூடும். கண்ணகி தொட்ட உஷ்ணத்தோடு எங்கோ புதைந் திருக்கும் கால் சிலம்பைக் கூடக் கண்டு பிடித்து பரவசப்பட்டுப் போகலாம். நாம் என்ன சொல்ல? ''தேடுங்களப்பா, தேடுங்க'' (கண்ணகி கற்பு லேசுப்பட்டதா என்ன?)

* சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டை ஒட்டிய 'ரவுண்டானா' நடுவில் கட்டபொம்மன் சிலை. முகம் மட்டும் நிமிர்ந்திருக்க கட்ட பொம்மன் வாளை 'எந்தப் பயலோ' உடைத்து விட்டிருக்கிறான். கட்டபொம்மன் எங்கோ வெட்டவெளியில் 'பராக்கு' பார்க்கும் போது இப்படியா வாளை ஒடிப்பது? சும்மா 'கான்ஸ்டபிள்' மாதிரி நடுத்தெருவில் நிற்கிற கட்டபொம்மனை தேர்தல் நேரத்தில் படு பிஸி. கட்டபொம்மன் கையில் ஒரு கட்சி தனது கொடியை மாட்ட, இன்னொரு கையில் இன்னொரு கட்சிக் கொடி. மாறி மாறி கட்சி மாறிக் கொண்டிருப்பான் கட்டபொம்மன். எந்தக் கட்சிக்கு, எந்த வேளையில் ரகசியமாக 'உறுப்பினர்' கார்டை அனுப்பி வைத் தானோ இப்படியொரு ராசி! நாம் பார்க்கும் போது கட்டபொம்மனைச் சுற்றி எஸ்.டி.எஸ். கட்சிக் கொடி. கட்டபொம்மனுக்குத் 'தூக்கு தண்டனையை விட' என்ன கொடுமை?

* மீனாட்சி அம்மன் கோவிலை ஒட்டின 'தேர்முட்டி' யோரமாக ஒரு சந்து. சந்தின் பெயர் 'மூத்திரச் சந்து'. போனால் சந்தின் முனையிலிருந்து நாற்றமாய் அருவி மாதிரிக் கொட்டிக் கொண்டிருக்கிறது. சற்று வேட்டி





வாங்கிக் கொடுத்துவிட்டால், தாயும் மகளும் கௌரவமாய் வயிற்றைக் கழுவிக் கொள்வார்கள். அதற்குத்தான் நான் படாத பாடு பட்டேன். ஷிப்டை அடிக்கடி மாற்றிக் கொண்டு நடையாய் நடந்தேன்.''

''ம்.''

''கடவுள் புண்ணியத்திலே என் முயற்சிக்கு வெற்றி கிடைத்துவிட்டது. அதைத் தெரிந்து கொள்ளத்தான் ஒரு வாரமாக என்னைத் தேடி இருக்கிறாள்.''

''ஆச்சரியமாய் இருக்கே. 'பிறத்தியார் விஷயத்திலே உங்களுக்கு இத்தனை அக்கறையா?'' மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்துவிட்டு விழிகளைப் பெரிதாக உருட்டினார் மாதவ மூர்த்தி.

''ஹூம்.... பிறத்தியார் விஷயம் என்றில்லை. சொந்த விவகாரங்களிலும் ரொம்ப சிரத்தையாய் இருப்பேன் சார். என் தங்கை சின்ன வயசிலேயே விதவை ஆயிட்டாள். அவள் மனசு நோகக் கூடாதுன்னு கடை வீதியா, சினிமாவா.... எதுவானாலும் சிரமத்தைப் பாராமல் நான்தான் அவளை அழைச்சுட்டுப் போவேன். இப்படிப் பல விவகாரத்தில் ஈடுபட்டதனால்தானோ என்னவோ உடம்பு பலவீனமாயிடுச்சு. நர்வஸ் வீக்னஸ். கொஞ்சம் முன்பு கவனித்திருப்பீர்களே.... உங்களிடமிருந்து டெலிபோன் ரிசீவரை வாங்கும்போதுகூட உங்கள் கையோடு சேர்த்துத்தான் அதை வாங்கினேன். இல்லேன்னா ரிசீவரைத் தவற விடும்படி ஆயிடும்.''

''ச்சோ!''

''இத்தனை உபகாரியாய் இருந்தும்கூட, விதி சில சமயம் காலை வாரிடுது சார்.''

''என்ன?''

''என்கூட வந்தவள் பொண்ணு கல்யாணம் நின்னுடுத்து சார்.''

சுரீரென்று முள் தைத்தது, மாதவ மூர்த்தியின் நெஞ்சில்.

அவரல்லவா அதற்குக் காரணம்.

ஒரு பெண்ணுக்கும் ஆணுக்கும் எத்தனையோ இலட்சியங்கள். அதன் காரணமாய் அவர்களுக்குத் தொடர்பு ஏற்படலாம். அதை விகாரமாகவும், வித்தியாசமாகவும் எடை போடுகிறதே இந்தப் பாழும் மனம். புளித்துப் புரையோடிப் போன அந்தச் சமூக ஸ்மரணைக்கு அவரும் அடிமையானதால் தானே, சீனுவாசனுக்கு இந்த நிலைமை....

மாதவ மூர்த்தி கண்ணாடியைத் திரும்பத் தெளிவாக எடுத்து மாட்டிக் கொண்டார்.

''கவலைப்படாதீர்கள் மிஸ்டர் சீனுவாசன். நின்று போன உங்கள் மகள் திருமணம் நிச்சயம் நடக்கும். அதற்கு நான் பொறுப்பு!'' என்றார் தீர்க்கமான குரலில்.

## சிட்டி நோட்ஸ்

யைத் தூக்கினபடி தவ்வித் தவ்விப் போகிறார்கள் வியாபாரிகள். தெற்கு வாசலிலிருந்து சின்னக் கடைத் தெரு முடிகிற இடத்திலும் இதே கதி. நாற்றத்தில் அழுது அழுது யோசித்த பக்கத்து வீட்டுக்காரர்கள் மூளையில் ஏதேதோ மின்னி, சின்னச் சின்னக் கோவில்கள் அந்த இடங்களில் வந்திருக்கின்றன. 'எங்களை இப்படி அவதிப் பட வைக்கிறாயே, நீயும் படு' என்ற கோபமோ?

* திருவிழாக் காலங்களில் மதுரைக்குத் தனிக் களை. மதுரைக்கே உரித்தான சித்திரைத் திருவிழா. அழகர் மலையிலிருந்து தங்கச்சி மீனாட்சி கல்யாணத்திற்கு வருகிறார் அழகர்; அண்ணன் வருவதற்குள் கல்யாணம் நடக்கும்போது அர்ச்சகர் வெகு கணக்காய் 'டும்ம' கல்யாணம் நின்றுவிட அண்ணன் அழகருக்கு சுறுசுறுவென்று கோபம். தெய்வீகக் கோபமாச்சே! நேரே ஆற்றில் இறங்குகிறார். இதற்கு ஆற்றில் வதவதவென்று பக்தி கோஷ்டிகள். இறங்குகிற சமயங்களில் நிறையப் பேர் 'மொட்டை'யடிக்க பல பேர் சூடம் காட்டி பரவசப்படுவார்கள். பிறகு அழகர் ஒரு முஸ்லீம் பெண்ணைப் பார்க்கப் போவதாகக் கதை. இதற்கு 'நேர்த்திக் கடன்' என்று ஒரு மாதிரியான வேஷத்துடன் குல்லாவும் அதுவுமாய் தண்ணீரில் பையைத் தூக்கிக் கொண்டு தரை, எதிரே வருகிறவன் முகம் உட்பட சகலத்திலும் ஒரு கூட்டம் தண்ணீர் பீச்சியடித்தபடி திரியும். அந்த நாட்களில் மதுரைக்கு ஒரு தனி முகம்தான்.

* உங்களை திடீரென்று கண்ணைக் கட்டி ஓர் ஏரியாவுக்கு கடத்தி விடுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். சும்மா ஒரு கற்பனைதான். சுற்றிலும் குரல்கள் மட்டும் கேட்கிறது.

நிதானியுங்கள்.

''அண்ணாச்சி.... என்ன செய்றாப்லே?'' என்று சௌஜன்யமாக கேட்கிறதா? தியேட்டர் வாசலில் ''படம் வக் ஜாலிப்பா. நீப் படம் எடுத்திருக்கான்பா....'' என்று கமெண்ட்ஸ் வருகிறதா? ''இப்படித்தானே குண்டக்க மண்டக்க பேசக்கூடாதுங்கிறது?'' என்று யாராவது சண்டை போடுகிறார்களா?

— மதுரையோ? என்கிற சந்தேகம் தட்டுகிறதா? சரி வாருங்கள். தியேட்டருக்குள் போகலாம். மலையாளப் படம் ஓடிக் கொண்டிருக்கிறது. ஸ்கிரீனில் பெண் முண்டோடு அந்தத் தவிப்பு தவித்துக் கொண்டிருக்கிறாள். ஆணோ உருகிக் கொண்டிருக்கிறான். கதாநாயகி நெருங்குகிறாள்; இதோ வந்தாயிற்று; நெருங்கியாயிற்று.

தியேட்டரில் பேச்சே இல்லை; மௌனமாகிக் கிடக்கும்போது, திடீரென்று ஒரு தடிமனான குரல் ராக்கெட் மாதிரி விறுவிறுவென்று தியேட்டர் உச்சிக்கு 'ஜே' கோஷம் போட்டு எழுந்திருக்கிறதா? கேட்டும் விட்டீர்களா?

போச்சு. சந்தேகமே வேண்டாம்.

'அப்ப' அது 'மருதை' ஸாரி மதுரையேதான்.

— ஜூலி




ராஜேஷ்குமார்

# 10

ஜீப்பின் சன்னமான இரைச்சலைக் கேட்டு — மனைவி மரகதாவை விட்டு விலகி வெளியே வந்து எட்டிப் பார்த்தான் கன்னியப்பன். இருதயம் ரேஸ் குதிரையாகப் பாய்ந்து பின்னர் நார்மலுக்கு வந்தது.

கன்னியப்பனின் தோள் வழியே மரகதாவும் எட்டிப் பார்த்தாள். அவளுடைய அகலமான கண்களில் பயம் ஒரு நீர்ப்படலமாய்ப் படிந்து போயிருக்கக் கேட்டாள்:

''என்னய்யா.... நம்ம வூட்டு வாசல்ல தாணாக்காரங்க ஜீப்பு வந்து நிக்குது.... எங்கியாச்சும் வண்டியை மோதிட்டியா?''

''இல்லே மரகதா....'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே காதோரம் 'பொல்' லென்று வெளுத்த அந்த இன்ஸ்பெக்டர் உள்ளே வந்தார். காக்கி யூனிபார்மை மாட்டும் போதே, வீட்டில் இருதயத்தைக் கழற்றி வைத்துவிடுகிற ரகம் என்று அவர் முகத்திலேயே தெரிந்தது. சாக்பீஸால் கோடு கிழித்த மாதிரியான நரை மீசைக்குக் கீழ் உதடுகள் வேகமாய் அசைந்தன.

''வாசல்ல நிக்குதே வண்டி..... அது உன்னோடதா?''

''ஆ.... ஆமா ஸார்.''

''உம் பேரென்ன?''

''கன்னியப்பன் ஸார்.''

''எத்தினி வருஷமா வண்டி ஓட்டறே...?''

''அஞ்சு வருஷமா.''

''உன்னோட லைசென்ஸையும், ஆர்.சி. புக்கையும் எடு....''

தன் காக்கிச் சட்டையின் பாக்கெட்டுக்குள் இருந்த லைசென்ஸை, எடுத்து நீட்டியவன், ''ஆர்.சி. புக் வண்டி டேஷ் போர்டுல இருக்கு ஸார்'' என்றான்.

இன்ஸ்பெக்டர் கன்னியப்பனின் லைசென்ஸை வாங்கிப் பார்த்துக் கொண்டே கேட்டார். ''கடைசியா சவாரி எங்கே போயிட்டு வந்தே....?''

''சென்ட்ரல் ஸ்டேஷன்லேயிருந்து சபா தியேட்டர் வரைக்கும் போயிட்டு வர்றேன் ஸார்.''

''பாஸஞ்சர் யாரு.... ஆணா, பொண்ணா?''

''பொண்ணு ஸார்.''

''வயசுப் பொண்ணு.''

''ஆமா ஸார்.''

''அந்தப் பொண்ணுகிட்டே என்னமோ அடாவடித்தனம் பண்ணினியாமே?'' இன்ஸ்பெக்டர் குரலை உயர்த்திக் கொண்டு கேட்க, நெற்றிப் பரப்பும் கண்களும் இடுங்கினான் கன்னியப்பன்.

''அடாவடித்தனமா....? என்ன ஸார் சொல்றீங்க?''

''இதோ பார்.... இந்த பால்லாத்தனமெல்லாம் என்கிட்டே வேண்டாம். உன்னை மாதிரியான டிரைவர்களைப் பத்தி எனக்கு நல்லாவே தெரியும். என்ன நடந்ததுன்னு நீயே சொல்லிட்டா கேஸை எந்த செக்‌ஷன்லே

புக் பண்ணலாம்ங்கிற முடிவுக்கு நான் வந்துடுவேன்.''

கன்னியப்பனின் உடம்பு தன்னிச்சையாய்ப் பதற ஆரம்பித்தது. ''ஸார் எனக்கும் அந்தப் பொண்ணுக்கும் எந்த சண்டையும் வரலே ஸார். சென்ட்ரல் ஸ்டேஷன்ல அந்தப் பொண்ணு என் வண்டியில் ஏறினு. அமிஞ்சிக்கரை போகணும்னு சொன்னு. நானும் அமிஞ்சிக்கரைப் பக்கமா போனேன். ஆனு ஈகா தியேட்டராண்டையே டாக்ஸியை நிறுத்தச் சொல்லி அந்தப் பொண்ணு எறங்கிடுச்சு.''

''அப்போ, உனக்கும் அந்தப் பொண்ணுக்கும் எந்த வாக்குவாதமும் நடக்கலே?''

''நடக்கலே ஸார்.''

இன்ஸ்பெக்டரின் கை மின்னல் வேகத்தில் சுழன்றது. 'ப்ப்பளீர்' என்ற சத்தத்தோடு கன்னியப்பனின் கன்னத்தில் கை பதிய, 'ஹம்மா' என்றலறிக் கண்களில் நீர் திரளப் பின் வாங்கினுன்.

''அய்யா..... இன்ஸ்பெக்டர் அய்யா எதுக்கோசரம் எம் புருசனே அடிக்கிறீங்க... அவரு எந்தத் தப்புத் தண்டாவுக்கும் போக மாட்டாரய்யா....''

''சீ போ அப்பாலே...'' கான்ஸ்டபிள்களில் ஒருவர் அவளைத் தன் கையால் தள்ளி விட்டார். மரகதாவின் சத்தலேக் கேட்டுத் தெரு ஜனம் கூட ஆரம்பித்தது.

''த்ரீ நாட் டு...''

''ஸார்...''

''இவனேயும் வண்டியையும் ஸ்டேஷனுக்குக் கொண்டு வாய்யா... அங்க வெச்சி விசாரிச்சாத்தான் இவன் உண்மையை ஒத்துக்குவான்...''

கன்னியப்பனின் கண்களில் நீர் திரண்டு உருண்டு சிதறியது. கைகூப்பினுன். ''ஸார்... யாரோ என்னேப் பத்தித் தப்பா உங்ககிட்டே சொல்லியிருக்காங்க...''

''இங்கே ஒரு வார்த்தை பேசாதே... விசாரிக்க வேண்டிய இடத்துல வெச்சு விசாரிச்சாத்தான் நீ உண்மையைச் சொல்லுவே... கான்ஸ்டபிள் உன் கூட வருவாரு... வண்டியை ஸ்டேஷனுக்குக் கொண்டாந்துடு.... ம்..... போ.....''

கன்னியப்பன் தயங்கி நிற்க —

இன்ஸ்பெக்டர் முறைத்தார்.

''என்னடா பார்த்துட்டு நிக்கறே...?''

''வண்டியைக் கொண்டு வர்றேன் ஸார்...'' கன்னியப்பன் நகர — அவன் பின்னுடியே அழுது கொண்டு வந்தாள் மரகதா. ''யோவ்... ஏதாச்சும் நடந்திருந்தா போலீஸ்ல உண்மையைச் சொல்லிடுய்யா... அவங்க மன்னிப்புக் குடுத்து விட்டுடுவாங்க...''

''ஒண்ணுமே நடக்கலே மரகதா...''

''அப்போ தகிரியமா போய்ட்டு வாய்யா... கொஞ்ச நேரத்துல நானும் வஸ்தாது அண்ணனும் ஸ்டேஷனுக்கு வர்றோம்...''

லேசாய்ப் பெய்து கொண்டிருந்த மழையைப் பொருட்படுத்தாமல் — அந்தத் தெரு ஜனம் முழுதும் திட்டுத் திட்டாய் நின்று வேடிக்கை பார்க்க — கன்னியப்பன் கான்ஸ்டபிளோடு தன் டாக்ஸியை நெருங்கினுன். ட்ரைவிங் சீட்டில் உட்கார்ந்தான். காரைச் சுற்றிக் கொண்டு அந்தப் பக்கத்துச் சீட்டுக்கு வர முயன்ற கான்ஸ்டபிள் டிக்கியின் பக்கமாய் வந்ததும் சட்டென்று நின்றுர்.

குனிந்து பார்த்தார்.

''என்ன மேன் பார்க்கிறே?'' ஜீப்பில் ஏறிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் திரும்பிப் பார்த்துக் கேட்டார்.

''மூடின டிக்கியோட இடுக்குல சாக்குத் துண்டு மாதிரி எதுவோ தெரியுது ஸார்... அதான் பார்த்தேன்...''

''சாக்குத் துண்டா?''

''ஆமா ஸார்...''

இன்ஸ்பெக்டர் வேகமாய் டிக்கியை நெருங்கினுர். டிரைவிங் சீட்டில் உட்கார்ந்திருந்த கன்னியப்பனும் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கி வந்தான்.

''இங்க வாய்யா...''

போனுன்.

''டிக்கியில என்ன வெச்சிருக்கே...?''

''ஒண்ணுமில்லே ஸார்...''

''ஒண்ணுமில்லேங்கறே... ஆனு டிக்கியோட இடுக்குல கோணிப் பையோட நுனி மாதிரி ஏதோ தெரியுதே... டிக்கியோட சாவியைக் குடு...''

''சாவி தொலஞ்சு போச்சு ஸார்... டிக்கி தொறந்துதான் இருக்கும்...''

''கான்ஸ்டபிள்! அத தொறந்து பாருய்யா...''

கான்ஸ்டபிள் டிக்கியை மேலே தூக்கினுர்.

நீள் சைஸில் அந்தக் கோணிப்பை தெரிந்தது. மூக்குக்குப் பிடிக்காத வாசம் குப்பென்று முகத்தில் அறைந்தது. இன்ஸ்பெக்டர் கண்கள் இடுங்கக் கேட்டார்.

''என்னய்யா மூட்டை...?''

பெண்ணின் தந்தை: நாம கொடுத்த சீர் வரிசை லிஸ்டில் சோபா, பீரோவை அடித்துவிட்டு, ஸ்கூட்டர்னு மாப்பிள்ளே எழுதி இருக்கிருரே...?

புரோக்கர்: நான்தான் அப்பவே சொன்னேனே மாப்பிள்ளே 'சீர்' திருத்தவாதின்னு!

— சடுவை. கோபால்சாமி.





கன்னியப்பனின் கண்களில் ஏராளமான ஆச்சரியம் ஓடிவந்து உட்கார்ந்தது. கோணிப் பையை அருகே நெருங்கிப் பார்த்தான். பிறகு நிமிர்ந்தான்.

''தெரியலே ஸார்...'' என்றான்.

''என்னய்யா தெரியலே...? இது உன்னோட டாக்ஸி.... உன்னோட டாக்ஸி டிக்கில இருக்கிறது என்னான்னு உனக்குத் தெரியாதா...?''

கன்னியப்பன் சிலவிநாடிகள் யோசித்துப் பார்த்தான். வீட்டுக்காக எதையாவது வாங்கி — டிக்கியில் போட்டுவிட்டு — ஞாபகமில்லாமல் இருந்து விட்டேனா?

''என்னய்யா யோசிக்கறே...?''

''நிஜமா தெரியலே ஸார்...''

''யோவ்! த்ரீ நாட் டு. அந்த மூட்டையைப் பிரிய்யா.,... மூட்டைக்குள்ளே இருக்கிறதைப் பார்த்துட்டாவது... அவன் சொல்லட்டும்...''

த்ரீ நாட் டு கோணிப்பையை இழுத்தார். அடுத்த விநாடி —

ப்ப்ச்சக்...கென்று விரல்களில் எதுவோ ஒட்டிக் கொண்டது. உருவிக் கொண்டு கையை வெளிச்சத்தில் பார்த்தார் த்ரீ நாட் டு.

பாதி உலர்ந்தும் உலராத ரத்தம்.

''ஸ... ஸார்... ர... ரத்தம்...'' கான்ஸ்டபிள் குனிந்து பார்த்துக்கத்த—இன்ஸ்பெக்டர் மூட்டையை நெருங்கி உற்றுப் பார்த்தார். கன்னியப்பனின் பக்கமாய்த் திரும்பினார். கேட்டார்.

''என்னடா மூட்டையில்...?''

கன்னியப்பனின் இருதயம் எகிற ஆரம்பித்தது.

''எ...எனக்கொண்ணும்தெரியாதுஸார்... இந்த மூட்டை எப்படி வந்ததுன்னே எனக்குத் தெரியலே ஸார்...''

''நீயே மூட்டையைப் பிரிடா...''

கன்னியப்பன் தயங்கிக் கொண்டே போய் — மூட்டையை இழுத்துக் கீழே தள்ளி அதன் முடிச்சை அவிழ்த்தான். கோணிப் பையை உருவினான்.

கன்னங்கரேலென்று அமிலம் ஊற்றிச் சிதைக்கப்பட்ட யாமினி ஒரு கெட்ட நாற்றத்தோடுவெளிப்பட்டு—பெய்துகொண்டிருந்த லேசான மழையில் நனைய—

பார்த்துக் கொண்டிருந்த மொத்தப் பேரும் —

அந்தப் பயங்கரத்தில் உறைந்து போக ஆரம்பித்தார்கள்.

விஸ்கியில் ஐஸ் கட்டிகள் கரைவதற்காகக் காத்திருந்தார் பிரபு. எதிரே தெரிந்த டி. வி. யில், நீல நிறச் சேலையில், நீல நிற ப்ளவுஸில், நீலநிறப் பொட்டில், நீலநிறப் பாசிமணி மாலையில் ஆங்கிலச் செய்திகளைப் படித்துக் கொண்டிருந்தாள் அந்தப் பெண். அவர் வளர்க்கும் சடை நாய் நிரம்பவும் விசுவாசமாய் அவர் காலடியில் படுத்துக் கொண்டு — அவருடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தது.

இண்டர்காம் 'கூக்கூக்கூக்' என்று கூவ— ரிஸீவரை எடுத்தார். ''எஸ்...''

பங்களா வாசலிலிருந்து வாட்ச்மேன்



# இப்படியும் ஒரு வீதி

மதுரை மாவட்டம் — பண்ணைபுரத்திலுள்ள வீதிகளில் ஒன்றுதான் இது. (ஆமாம்: இளையராஜா வீடு பக்கத்துத் தெருவில்தான் உள்ளது) தமிழகத்தில், ஏன்? உலகின் எந்த மூலையில் உள்ள வீதிக்கும் இல்லாத சிறப்பம்சம் ஒன்று இந்த வீதிக்கு மட்டும்தான் உண்டு. ஆம்; மழைக் காலத்தில் பெருக்கெடுத்து வரும் கரியனம்பட்டி ஓடை நீர் இந்த வீதிக்குள்தான் ஓடும். அப்போது வீட்டிலிருக்கும் யாரும் வெளியில் வர முடியாது. அடுத்த தெருவுக்குச் சென்றவர்களும் இங்கே வரமுடியாது. வெள்ளம் வடிய ஆகும் நேரமான சுமார் ஐந்தாறு மணி நேரத்திற்கு அனைவருக்கும் குலை நடுக்கம்தான்!

அப்படி வரும் வெள்ளத்தில் பல குழந்தைகளைப் பலி கொடுத்திருக்கிறார்களாம் இந்தத் தெருவாசிகள். இப்படிப்பட்டதோர், ஆபத்தான தெருவில், ஏன் குடியிருக்கிறீர்கள்? என்று செல்வி என்ற பெண்ணிடம் கேட்டபோது, "வேறு எந்த எடத்துல சாமி மாசம் பத்து ரூவா வாடகையில் வூடு குடுப்பாங்க?" என்றார்.

— நமது நிருபர்.

பவ்யமாய் ''ஸார்... மிஸ்டர் சந்திரபோஸ் மிஸ் சீதா ரெண்டு பேரும் வேன்ல வந்திருக்காங்க... உங்களைப் பார்க்கணுமாம்...''

''அனுப்பு...''

ரிஸிவரை வைத்துவிட்டு — ஐஸ் முழுகமாய்க் கரைந்து போயிருந்த ஜில்லிப்பான விஸ்கியை எடுத்து ஒரு வாய் உறிஞ்சிவிட்டு—டம்ளரை உள்ளங்கையில் வைத்து உருட்டினார். டி. வி. திரையைப் பார்த்தார். அந்த நீலப்பெண் ஒரு ஆப்பிரிக்க நாட்டின் அதிபர் இந்தியாவுக்கு வந்துவிட்டுப் போனதால் இருநாடுகளும் என்னென்ன நன்மைகளைப் பெறப் போகிறது என்பதை நம்பிக்கையில்லாத குரலில் சொல்லிக் கொண்டிருந்தாள்.

சந்திரபோஸும், சீதாவும் உள்ளே நுழைந்தார்கள். மழையில் நனைந்திருந்தார்கள்.

''ஸாரி பார் த டிஸ்டர்பன்ஸ் பாஸ்.''

''வாங்க...''

இன்னும் உள்ளே வந்தார்கள். கறுப்பு குஷன் வைத்த நாற்காலிகளைக் காட்டினார் பிரபு...'' உட்காருங்க...''

உட்கார்ந்தார்கள். கேட்டார்:

''ஃபினிஷ்ட்?''

''ஃபினிஷ்ட் ஸார்...''

''எப்படி?''

சந்திரபோஸும், சீதாவும் மாறி மாறிச் சொன்னார்கள். ஒரு ஐந்து நிமிஷத்திற்குச் சொல்லிவிட்டுப் பிரபுவின் முகத்தையே பார்த்தார்கள்.

பிரபு யோசித்து விட்டு —

''குட் ஜாப்...'' என்றார். விஸ்கியை முழுகமாய் விழுங்கிவிட்டு சந்திரபோஸை ஏறிட்டார். ''அந்த டாக்ஸி டிரைவரோட பேர் என்ன?''

''தெரியலே பாஸ்...''

''வண்டி நெம்பர்...?''

சொன்னான்.

பிரபு சிரித்தார். ''பிளானை நல்லா பேப்ரிகேட் பண்ணி அவனை மாட்ட வெச்சிருக்கீங்க... யாமினியோட வானிடி பேக்கும் டாக்ஸியிலதானே இருக்கு...?''

''ஆமா... பாஸ்...'' சீதா சொன்னாள்.

''குட்! சீதா...! ட்ரிங்க்ஸ் சாப்பிடறியா?''

''வேண்டாம் பாஸ்...''

''அப்போ நீ புறப்படு... நானும் சந்திரபோஸும் ட்ரிங்க்ஸ் சாப்ட்டுக்கிட்டே கொஞ்சம் கம்பெனி விஷயங்களையும் பேசிடறோம்...''

சீதா எழுந்தாள். ''ஓ... கே... பாஸ் குட்நைட்... குட்நைட் சந்திரபோஸ்.''

''குட்நைட்... நீ ஆட்டோ பிடிச்சுப் போயிடுவியா... சீதா...?''

''போயிடுவேன்...''

சீதா வெளியேறிப் போனாள்.

அவள் போனதும் —

பிரபு ஸ்காட்ச் பாட்டிலை எடுத்து டம்ளர்களில் சலசலவென்று ஊற்றினார். வெள்ளி இடுக்கியால் ஐஸ் க்யூப்புகளை எடுத்துப் போட்டார். உடைத்து வைத்திருந்த சோடாவைக் கலந்தார். சந்திரபோஸின் பக்கமாய் ஒரு டம்ளரை நகர்த்தி வைத்துக் கொண்டே —

''சந்திரபோஸ்...'' என்றார்.

''பாஸ்...''

''நீயும் சீதாவும் அற்புதமா பிளான் பண்ணி அந்த டிரைவரை இதுல இழுத்து விட்டிருக்கீங்க... குட்... ஆனா அதுல நமக்கொரு பாதகம் இருக்கு...

''பாஸ்...! எனக்குப் புரியலே...''

''சீதாவை அந்த டாக்ஸி டிரைவர் பார்த்திருக்கான்... நாளைக்கு அவன் சீதாவை எங்கேயாவது வெச்சு அடையாளம் காட்டிட்டான்னா... போலீஸோட சந்தேகம் நம்ம பக்கமா திரும்ப ஆரம்பிச்சுடும்... அந்த அநாவசியமான தொந்தரவு நமக்கு வேணுமா சந்திரபோஸ்?''

''வேண்டாம் பாஸ்...''

''வேண்டாம்னு நினைச்சா... சீதாவை நீதான் சுத்தம் பண்ணணும்.''

''பண்ணிடறேன் பாஸ்...''

சொல்லிக் கொண்டே விஸ்கி டம்ளரை எடுத்து — பிரபுவின் டம்ளர்மேல் மோதி 'சியர்ஸ்' என்றான். பிரபு கேட்டார்.

''எப்படிப் பண்ணப் போறே?''

(தொடரும்)

# சொர்க்கத்தின் கதவுகள்

19

கணேசன், அலுவலக வேலைக்குள் மூழ்கி எழுந்து கொண்டிருந்தார். ஒரு வார காலமாக நடந்து முடிந்திருந்த கம்பெனி மீட்டிங் விவகாரத்தில் அவரது தலை வெடித்துப் போகும் அளவிற்கு, விஷயங்கள் சிக்கலாகிவிட்டிருந்தன.. எம். டி. அவரைப் பல்வேறு கேள்விகளால் குடைந்து கொண்டிருந்த ஆத்திரம் வேறு.

வீட்டில் திடுமென்று வந்து குதித்த மகள் ஐஸ்வர்யாவும், மகன் அஸ்வத்தும் குட்டையைக் குழப்பிக் கொண்டிருந்தது அவரது கொதிப்பை அதிகரிக்கச் செய்திருந்தது. அருணாவிடம் அவருக்கு எப்போதுமே சிறிது பயம் உண்டு. பெரிய இடத்திலிருந்து வந்தவள் என்ற பக்தி. குடும்பத்தை அவளால்தான் நிர்வகிக்க முடியும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை. அதற்கு மேல் அவளிடம் சற்றுக் கடிந்துவிட்டால், அவள பதிலுக்குப் பாம்பாய்ச் சீற ஆரம்பித்து விடுவாள் என்ற நடுக்கம். கூடுமானவரை, வீட்டு விவகாரங்களில் தலையிடாமல் இருப்பதே சாலச் சிறந்தது என்று எண்ணித் தலையிடாக் கொள்கையை அனுசரித்தபடி எட்ட இருந்து வந்தார்.

ரிஸப்ஷனிஸ்ட் இண்டர்காமில் அவரை அழைத்ததும், சற்று எரிச்சலுடன், "ஹலோ... என்னம்மா" என்றார். ஒருவேளை அருணா ஏதானும் தொணதொணக்கிறாளோ என்ற பயம்.

"உங்க சகோதரர் வந்திருக்கார். உங்களைப் பாக்கணும் என்கிறார்."

யாரது? அண்ணாவா? அதுவும் அவரது அலுவலகத்தைத் தேடி......? மனத்தினுள் நெளிந்த கேள்விகளை அடக்கியபடி, "வரச் சொல்" என்றார்.

சிறிது நேரத்தில் அறைக் கதவை இலேசாக விரல்களால் தட்டும் ஒலி கேட்டதும், "வாங்கோ" என்றார் கணேசன்.

வெள்ளை நிற ஜிப்பாவும், வேட்டியுமாக எளிய தோற்றத்தில் உள்ளே வந்த தமையனைக் கண்டதும் அவர் மனம் சஞ்சலமடைந்தது.

உத்தியோகம் வகித்த நாட்களில்கூட அவர் சுத்தமாக உடுத்துவார். ஆனால் ஆடம்பரமாக உடை உடுத்திப் பார்த்ததில்லை. பண்டிகை நாட்களில் துணி எடுக்கும்போதுகூட, தமக்கென்று எதையும் வாங்க மாட்டார்.

'கணேசன்தான் பெரிய வேலை பார்க்கப் போறவன். அவனுக்குக் கொஞ்சம் பகட்டாக இருக்கட்டும்னு 'டெரீன்' ஷர்ட்டிங் வாங்கினேன்' என்பார். பம்பாய் சகோதரியைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். சண்டை போட்டாவது அவளுக்குப் பிடித்ததைப் பிடுங்கிக் கொண்டு விடுவாள்.

"காலேஜுக்குப் போகிற பிள்ளை. நன்றாக உடுத்திக் கொண்டு நாலு பேர் நடுவில் மதிப்போடு இருக்கணுமே" மன்னி விமலா மைத்துனருக்காகப் பரிந்து பேசுவாள்.

பெற்ற மகனுக்கும் மேலாகத்தான் அவரை இந்த நிலைக்கு உயர்த்தப் பாடு பட்டிருக்கிறார் சுவாமிநாதன். ஆனால் ஒரு முறைகூட, "செய்த நன்றி மறந்து போயிட்டாயே" என்று கடிந்து கொள்ளவில்லை.

கணேசன் பிரிந்து போனபோதுகூட அவர் மனத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. "பெரிய அதிகாரியாயிட்டான். நாலு பெரிய மனுஷர்கள் வருவார்கள் போவார்கள். தனியாக இருக்கிறது நல்லதுதான்" என்று ஆறுதலாக மனைவியிடம் கூறினார். விமலாதான் பெரிதும் தவித்துப் போனவள்.

"விமலா! அருணாவுக்கும் உனக்கும் இனி ஒத்துக் கொள்ளாது. கணேசன் பதவி உயர்வினால் 'பார்ட்டி' போன்ற வைபவங்களில் மூழ்கி விடுவான். அந்த நடைமுறைக் கேளிக்கை வாழ்க்கை நமக்கு ஒத்துக் கொள்ளாது."

புது வீடு கட்டிக் கிரஹப்ரவேசம் செய்த போதும் சுவாமிநாதன் முகம் கோணாமல் வந்து சிறப்புச் செய்தார். அருணாவிற்குத்தான் அவர்களது வருகை பெருமை தரவில்லை. மனத்துக்குள் கடுகடுத்தபடி ஓரகத்தியை ஜாடையாக ஓரம் கட்டிவிட்டிருந்தாள்.

பணக்காரர்கள் என்றால் பெரிய இடம் என்று நினைப்பவள் அருணா. புதுமனை புகுவிழாவுக்கு வந்திருந்த பெரிய மனிதர்களிடையே விமலாவின் தோற்றம் அவளுக்கு அவமானத்தைத் தந்தது போலும். அதனால், "மன்னி! சமையல்காரர் என்னவோ கேட்கிறார். கொஞ்சம் ஸ்டோர் ரூமைக் கவனிக்கிறேளா" என்று சாமர்த்தியமாகப் பின்புறம் தள்ளிவிட்டாள். இப்போது இருவருமே வாழ்க்கைப் படிகளின் கீழே கிடக்கிறார்கள்

என்ற உண்மையில் கணேசன் மனம் கரைந்தது.

''உட்காருங்கோ.....'' கரகரத்த குரலில் உபசரித்தார் கணேசன்.

சுவாமிநாதன் பதில் கூறமல், நெற்றி மீது படிந்த வியர்வையை மேல் துண்டால் ஒற்றி எடுத்தபடி உட்கார்ந்தார்.

''ஏதாவது சாப்பிடறேளா?''

வேண்டாம் என்ற பாவனையில் தலையை அசைத்துவிட்டுத் தொண்டையைச் செருமிக் கொண்டார் சுவாமிநாதன்.

அண்ணனுடைய முகபாவங்களிலிருந்து அவரால் ஏதோ பெரிய விஷயத்திற்கு ஆயத்



தம் நடைபெறுகிறது என ஊகிக்க முடிந்தது. அருணா அவன்ரை, அஸ்வத் பற்றி எச்சரித்து விட்டிருந்ததும் நினைவில் வந்தது.

''உங்கிட்டே ரொம்ப முக்கியமான விஷயம் பேசணும்னு வந்தேன். ஆபீஸ்லேதான் சௌகரியப்படும்னு தோன்றியது. வந்துவிட்டேன்.''

தமையனின் முகத்தை உற்றுப் பார்த்தபடி ''சொல்லுங்கோ. நீங்க ஆபீஸ்ல என்னைத் தேடி வந்ததிலேருந்து, அது அருணா சம்பந்தப்



படாத விஷயம்னு தோன்றுகிறது'' என்றார் தம்பி.

''அப்படி இல்லே கணேசா. அருணாவுக்குக் கொஞ்சம் படபடப்பு சுபாவம். நான் சொல்லப் போகிற விஷயத்தை, நிதானமா, ஆலோசனை செய்து முடிவு எடுக்கணும். அதுதான் இங்கே வந்தேன். நீ என்ன சொல்றேன்னு கேட்டுவிட்டு, அப்புறமா அருணா கிட்டேயும் கலந்து ஆலோசிக்கலாம்னு உத்தேசம்.'' அவர் நிறுத்தினார்.

''சொல்லுங்கோ.'' கணேசனுக்குப் பொறுமை போய்க் கொண்டிருந்தது.

''அஸ்வத் கல்யாண விஷயமாகப் பேச வந்திருக்கேன்.''

கணேசன் புருவங்கள் உயர்ந்தன. அருணா சொன்ன விஷயம்..... கேள்வியுடன் தமையனைப் பார்த்தார்.

''இப்ப யாரும் உன்னைக் கூப்பிட மாட்டாளே?''

''நான் ரிஸப்ஷனிஸ்ட்கிட்ட சொல்லி வைக்கிறேன். யாரையும் உள்ளே விட மாட்டா'' இண்டர்காமில் உத்தரவிட்டுவிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தார் கணேசன்.

''அஸ்வத் கல்யாண விஷயமா நான் பேச வந்திருக்கேன்.''

''நீங்களா?''

''ஆமாம். ஏன்னா, பெண்ணை அவனே தேர்ந்தெடுத்தாச்சுன்னு தெரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன். பெங்களூர் பொண்ணு. ரொம்ப சாதாரணக் குடும்பம்.....''

கணேசன் பொறுமையிழந்தார். கோபத்தால் முகம் சிவந்தது. ''போறும் அண்ணா. ஏற்கெனவே, ஐஸ்வர்யா விஷயத்தில் நீங்க பண்ணி வெச்ச குளறுபடி போறாதுன்னு. அஸ்வத் விஷயத்திலேயும் ஆரம்பிச்சுட்டேளா? இது உங்களுக்கே நன்றாயிருக்கா'' கடுகடுத்தார்.

சுவாமிநாதன் பனங்காட்டு நரி. இது போன்ற சலசலப்புக்கு அஞ்சினால் எப்படி? மெல்லிய முறுவலுடன், ''இதோ பாரு கணேசா! நீ கோபப்பட்டு எந்த பிரயோஜனமும் இல்லே'' என்று ஆரம்பித்தார்.

''சொல்ல மாட்டேளா? சொல்லுவேன். ஏன்னா இது உங்க பிள்ளை இல்லையே. என் பிள்ளை, அதனால். உங்கள் பிள்ளை காதல் கத்தரிக்காய்னு தெருவில் போகிறவளை இழுத்துக் கொண்டு வந்தால் பேசாமல் இருப்பேளா?''

சுவாமிநாதன் ஒரு விநாடி திகைத்துப் போனார். என்ன இது? இவனையே பெற்ற பிள்ளை போல் கண்ணும் கருத்துமாக வளர்த்தேன். இவனது குழந்தைகளை என் குழந்தைகளைப் போல வளர்த்து ஆளாக்கியதற்கு.... என்ன பேச்சுப் பேசிவிட்டான்? ஒரு கணம் அவரது முன் கோபம் சீறிக் கொண்டு முன் வந்தது.

''நீ கல்யாணத்திற்கு ஒப்புக்கொள்ளாவிட்டால், அவர்களே ரிஜிஸ்தர் ஆபீஸில் போய்க் கல்யாணம் செய்து கொண்டு வந்து நிற்பார்கள்'' என்று சொல்ல நாக்குத் துடித்தது. சிரமத்துடன் உணர்ச்சியை விழுங்கிக் கொண்டார்.

''கணேசா! அவா ரெண்டு பேர் மனசும் ஒத்துப் போயிட்டது. இதில நீ கோபப்பட்டு என்ன பயன்?'' என்றார் மெதுவாக.

''ஏன்? நீங்க இவ்வளவு பெரியவர். உங்களிட்டம் புத்திமதி கேட்க வந்தால், புத்திமதி சொல்லி அனுப்பி இருக்கணும். அதை விட்டுவிட்டு, இப்பத் தூது நடக்க வந்திருக்கேளே. இது உங்களுக்கே நன்றாயிருக்கா?'' கணேசனின் குரல் உயர்ந்தது.

''கவிஞன், காதலன், மனநோய்க்காரன் இவர்கள்கிட்டே எதுவும் பேசித் திருத்த முடியாது.''

''உபதேசம் பண்ண வந்திருக்கேளா, இல்லே கேலி செய்ய வந்தேளா?'' காரமாகக்

## மின்சார பில்லில் கூட ஷாக்கா?



மின் வாரியம் மின்சாரம் சப்ளை செய்யும் விதத்தைப் பற்றிப் பேசும்போதே ஜனங்கள் சின்ன 'ஷாக்'குடன்தான் பேசுகிறார்கள். அவ்வளவு பெயர் இருக்கிறது மதுரை மின் வாரியத்துக்கு. மின்வாரிய ஊழியர்கள் 'மீட்டரே பார்ப்பதில்லை' என்று எங்கு பிரமாணம் எடுத்துக் கொண்டார்களோ தெரியவில்லை. அநேக வீட்டு மீட்டர்களைச் சுற்றி ஒரே தூசியும், தும்புமாய் இருக்க, சில மீட்டர்களில் ஊழியர்கள் புண்ணியத்தில் சிலந்திகள் வசித்துக் கொண்டிருக்கின்றன. இருந்தாலும் பில்மட்டும் ஒவ்வொரு மாதமும் கணக்காக வந்துவிடுகின்றது. காலனிக்காரர்களுக்கு ரொம்ப ஆச்சரியம். மீட்டர் பார்க்காமலேயே எவ்வளவு அற்புதமாய் தூரத்தில் எங்கோ இருந்து பார்த்து, 'ரேட்'டையும் நிர்ணயித்து — பில் அனுப்புகிறார்களே என்று அவ்வளவு ஆச்சரியம். எல்லீஸ் நகர், ரேஸ்கோர்ஸ் காலனி வாசிகளுக்குத்தான் இந்தப் புண்ணியம்.

ரேஸ்கோர்ஸ் காலனிக்கு நாம் போனதும் — பலரும் மீட்டரைக் காட்டிப் பதற்றப்பட ஆரம்பித்துவிட்டார்கள். ரே. கோ. காலனியில் ஒரு வீட்டில் —, நவம்பர் 85 ல் 103 யூனிட்டுகள் செலவழித்ததாக 73.50 பில். ஜனவரி மாதமே பச்சாதாபப்பட்டு 34 யூனிட்டுகளாகக் குறைத்து விட்டார்கள். பக்கத்து 'பிளாக்'கிலும் ஒரு வீட்டில் அக்டோபர் 85 ல் 72 யூனிட் என்று 46.60 பில் வந்திருக்கிறது. நவம்பரில் 41 யூனிட் என்று 26 ரூபாய் பில் வருகிறது: இப்படி மாறி மாறி பில் வருகிற நாட்களில், பில்லை வாங்கும்போதே ஜனங்களுக்கு சிறு 'ஷாக்'. மீட்டரைப் பார்க்காமலேயே நிர்ணயிக்கும் 'பில்லை' ஒரு புலம்பு புலம்பி விட்டு வேறு வழியின்றிக் கட்டிக் கொண்டு இருக்கிறார்கள் காலனி வாசிகள்.

— நமது நிருபர்.

---

கேட்டார் கணேசன்.

"இரண்டும் இல்லே. அஸ்வத்கிட்ட நான் பேசிப் பார்த்தேன். அந்தப் பெண் மஞ்சுளாவை பெங்களூர்ல இருந்து இங்கே வரவழைக்கிறதா சொல்லி இருக்கான். நீயும், அருணாவும் அந்தப் பெண்ணைப் பாருங்கோ. மேற்கொண்டு நல்லதாக முடிவு எடுக்கலாம்."

"பேஷ்! நல்ல முடிவு நாங்க எடுக்கிறத்துக்கு நீங்க புத்திமதி சொல்ல வந்திருக்கேளோ?"

"முடிவு அஸ்வத் எடுத்துவிட்டான். ஆனால், அதை நாமும் ஒப்புக் கொண்டு, அங்கீகாரம் பண்ணணும்னு கேட்டுக்கத்தான் வந்தேன்."

கணேசனின் கோபம் கனல் விட்டெரிந்தது. "அருணா சொல்றது ரொம்ப சரி. நான் கூட அவ வேணும்னு உங்க மேல் குற்றம் சொல்கிறதா அசட்டையாக இருந்தேன். இப்பத்தான் புரியறது."

சுவாமிநாதன் அவரை உறுத்துப் பார்த்தார். "என்னப்பா புரிஞ்சுது?"

"நாங்க நல்லபடியாக இருக்கிறது உங்களுக்குப் பொறுக்கலே. எப்படா இவன் குடும்ப அந்தஸ்து கீழே இறங்கும்னு சந்தர்ப்பம் பார்த்துத் தாக்க வந்திருக்கேள்."

சுவாமிநாதன் விருட்டென்று எழுந்தார். அதுவரை அடக்கி வைத்திருந்த சினம் சீறிப்பாய ஆரம்பித்தது.

"என்ன சொன்னே கணேசா? என்னைப் பார்த்து..... என்னைப் பார்த்தா..... அப்படிச் சொன்னே?" குரல் நடுமாற அவர் விழித்துப் பார்த்தார்.

"கணேசா! நீ பெரிய மனுஷனா வரணும், உயர்ந்த அதிகாரியா இருக்கணும்னு இந்த அண்ணாதான் நினைச்சேன். இந்த உடம்பு இருக்கே இதைப் போட்டு ராவும் பகலுமா தேய்த்துக் கொண்டேன். இந்தக் கை இருக்கு பாரு. இந்தக் கையால் வாங்கின சம்பளம் முழுதும், என் தம்பி, என் தங்கை, என் அம்மான்னுதான் செலவழிச்சிருக்கேன். உனக்கு உடம்புக்குன்னு வந்தா, ஊரிலே இருக்கிற டாக்டர்கிட்டே எல்லாம் ஓடுவேன். ஆனால் என்னைப் பற்றி நான் சிந்திச்சதே இல்லே..... இந்தத் தோள் மேலே உன்னைத் தூக்கி வச்சுக்கலே. ஆனால் அப்படி நினைச்சுத்தான் உன்னை வளர்த்தேன். கணேசா! ஒண்ணு தெரிஞ்சுக்கோ, பணம், அந்தஸ்து மட்டும் வாழ்க்கை இல்லேப்பா, அதுக்கும் மேலே ஒண்ணு இருக்கு. அதுதான் குணம். மனிதாபிமானம் என்கிற குணம். அது இல்லாவிட்டால் நீ வெறும் நாலு கால் பிராணி மாதிரி. உங்கண்ணன் கையில் காசு இல்லே, பெண்டாட்டி நோய்க்குக்கூட சிகிச்சை செய்ய வசதி இல்லாதவன். ஆனால் அவன்கிட்டே மனசு இருக்கு, கடமை உணர்ச்சி இருக்கு. அதனால்தான் நம்ம குடும்ப விஷயமாச்சே, அஸ்வத் நம்ம வீட்டுப் பிள்ளை. அவன் ஏடாகூடமாக ஏதாவது செஞ்சுடப் படாதேன்னு உங்கிட்டே எடுத்துச் சொல்ல ஓடி வந்தேன். அதுக்கு நீ குடுத்த பட்டம் போதும்பா. போதும்."

அறைக் கதவைப் 'பரக்'கெனத் திறந்தவர் திரும்பினார். படபடப்பாகப் பேசியதால் மூச்சிரைத்தது.

"கணேசா! இப்ப இதையும் தெரிஞ்சுக்கோ. உன் ஐஸ்வர்யா இங்கே எதுக்கு வந்திருக்கா தெரியுமா? அவளுக்கு விவாகரத்து வேணுமாம். எங்கிட்டே புத்திமதி கேட்க வந்தான்."

"அண்ணா!" தொண்டைக்குள் சிக்கிய வார்த்தைகள் வெளியேறுமுன், சுவாமிநாதன் மறைந்துவிட்டார். இது என்ன விபரீதம்! கணேசன் முகத்தின் மீது ஆடி ஆடித் திரும்பிய அறைக் கதவு, படீரெனத் தாக்கியது போன்ற உணர்வுடன் உறைந்து போனார்.

(தொடரும்)



சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்
இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்—அது, காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும். பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆண்டிஸெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாற்றிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் என்னேரமும் ஏற்படலாம்.**




Johnson & Johnson

OBM/2513 TAM

எதிர்பார்ப்புக்கு
அப்பாற்பட்ட அரியதொரு படைப்பு!



மோதி காண்டினென்டல்
R80 நைலான் கார் டயர்

**மைலேஜ் ப்ளஸ்!**

ஆம், உண்மையைச் சொல்லப்போனால், இது ஒரு ஒப்பற்ற, அரிய படைப்பு !

### ஆராய்ச்சியே இதன் முதலீடு

பல கோடி ரூபாய் செலவிலான மோதி காண்டினென்டல் ஆராய்ச்சியே, நிகரற்ற தொழில் நுட்பச் சிறப்புடைய இந்த R80 நைலான் கார் டயரைப் படைத்துள்ளது.

### மேலும் பல சிறப்புகள்.

உயரிய R80 ப்ரீமியம் டயர், கூடுதல் அகலம் கொண்டதால், அதிக உறுதியான பிடிமானத்தைத் தருகிறது.

சாலையில் நீங்கள் செல்லும் போது, இதுவரை அறிந்திராத அந்த ஒரு பிடிமானத்தை R80 அளிப்பதற்கு இன்னும் இரு காரணங்கள் : விஞ்ஞான ரீதியில் வடிவமைக்கப் பட்ட, 15% அதிக நான்-ஸ்கிட் டெப்த் (சருக்காமல், வழுக்காமல் இருக்க 15% அதிக ஆழமுடையது) அடங்கிய ட்ரட் பரப்பு. செறிந்து, வளைந்து அமைக்கப்பட்ட ஏழு சிப்புகள்.

### எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டது.

ஆம், இது எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்ட ஒரு படைப்
இதனால் நீங்கள் ஒரு போதும் நினைத்துப் பார்த்திராத மேம்
பட்ட மைலேஜ் இப்பொழுது கிடைத்திடும் வாய்ப்புள்ளது.
உயரிய தொழில்திறன் அளித்திடும் இந்த வாய்ப்பினை நழு
விட்டு விடாதீர்கள். R80 க்கு மாறுங்கள்- இனி நீங்கள்
வேறெந்த டயருக்கும் மாறமாட்டீர்கள்.





**மோதி காண்டினென்டல்**



ஒரு போதும் அயராத டயர்



விவரமறிந்தோர் நாடுவது
ஆஸ்ப்ரோ ஆறுதல்
இப்போது 2 வித வீரிய வகைகளில் வருகிறது.
ஆஸ்ப்ரோ , ஆஸ்ப்ரோ 600






சாதாரண
தலைவலிக்கு
ASPRO
ஆஸ்ப்ரோ




மண்டை பிளக்கும்
கடுமையான
தலைவலிக்கு
ASPRO
600
எக்ஸ்ட்ரா ஸ்ட்ரெங்த்
ஆஸ்ப்ரோ 600

**பு**ழுதியைக் கிளப்பி விட்டு, டிஸ் டர் டர் என்று கிளம்பிப் போயிற்று. தூரத்தில் புல்லைப் பார்த்த சந்தோஷத்தில் ஓர் ஆடு 'மே' என்று சந்தோஷக் கூச்சல் போட்டது.

பார்வதி ஏக்கத்துடன் வருவோர் போவோரைப் பார்த்தாள். யாரும் காய்கறி வாங்க விருப்பப்படுகிறவர்களாகத் தெரியவில்லை. ஊரில் உள்ள அத்தனை பேரும் ஒட்டு மொத்தமாக இனி காய்கறிகளையே சாப்பிடுவதில்லை என்று சபதம் எடுத்துவிட்டார்களா என்ன?

"பார்வதி ஒம்பாடு தேவலாம். ஏதோ கொஞ்சமாவது வித்திருக்கே. நான் பாரு



வந்ததிலேர்ந்து போணியாகாமே உக்காந்திருக்கேன்."

"ம்ஹ்ம்.... குளிர் காலம் வேறே வரப் போவுது. டூரிஸ்ட் வண்டியெல்லாம் கொறைஞ்சி போயிடும். நான் மிச்சமிருக்கிற நாளை எப்படித்தான் தள்ளப் போறேனோ?" என்று சலித்துக் கொண்டாள் பார்வதி.

வீட்டை நினைத்துக்கொண்டாள். குழந்தைகள் பசியால் தவித்துக் கொண்டிருக்கும். புறப்பட்டுவிட்டாள்.

**சி**ன்னப்பா தலையில் விறகுச் சுமையுடன் சாலையைக் கடந்தான். வியர்வை நெற்றி, கன்னம், மார்பு என்று இறங்கியது. தாடஜ்ஜா எதிர்ப்பட்டார்.

"என்ன சின்னப்பா, இன்னும் விறகை வித்து முடிக்கலையா?"

"எங்கே தாடஜ்ஜா.... இந்த ஊரை வேடிக்கை பார்க்க வர்ற டூரிஸ்டுங்க எல்லாம் கிளம்பிப் போயிட்டாங்க. கணப்புக்குப் போட விறகை இனிமே யார் எங்கிட்டே வாங்கப் போறாங்க?" என்றான்: பெருமூச்சு விட்டான். அனல் கலந்து வந்தது மூச்சு. "நான் வீட்டைப் பார்க்கப் போறேன். மூணு பசங்க வேறே வீட்ல பசியாறக் காத்திருப்பாங்க. குளிர் காலத்தை எப்படித்தான் ஓட்டப் போறேனோ?" என்று வீட்டைப் பார்த்து நடந்துகொண்டே முணுமுணுத்தான்.

**வீ**ட்டை அணுகினான்.

சுமையைக் குடிசை வாசலில் போட்டான். நுழைந்தான். பார்வதி அடுப்புப் புகையுடன் மன்றாடிக் கொண்டிருந்தாள். சின்னக் குழந்தைகள் இரண்டும் குடிசையின் மண் தரையில் விளையாடிக் கொண்டிருந்தன.

"ராமு எங்கே பார்வதி?" என்று கேட்டான் சின்னப்பா.

"படிப்பில் ஏதோ சந்தேகம். வாத்தியாரைக் கேட்டு வரேன்னு போயிருக்கான்" என்றாள் பார்வதி, புகையால் கலங்கிப் போன கண்களைத் தேய்த்துக் கொண்டே.

**ரா**மு கைகட்டிக் கொண்டு நின்றான். எதிரில் அவனுடைய வகுப்பு ஆசிரியர். கைகளை ஆட்டி ஆட்டிப் பேசினார். ராமு அவர் சொல்வதைப் பிரமிப்புடன் கேட்டுக் கொண்டிருந்தான்.

திரைவிழாப் படக்கதை—7

''ராமு, ராமன் அப்படிப்பட்ட ஒரு சுத்த வீரன். அவனுடைய அன்பு அவனுடைய தம்பிகளிடத்தில் அபாரமாய் இருந்தது. அந்த ஸ்ரீராமன் அப்பா கிழித்த கோட்டைத் தாண்டி அறியாதவன். தாயின் அன்பு வார்த்தைகளை ஆணையாக மதித்து நடப்பவன்.''

ராமுவிற்கு அவன் பார்த்தேயறியாத ஸ்ரீராமனின் பேரில் ஓர் அபரிமிதமான ஆசை வளர்ந்தது. காதல் வளர்ந்தது. பிரமிப்பு வளர்ந்தது.

''இப்ப நீ வீட்டுக்குப் போ. நான் அப்பப்ப ஸ்ரீராமனைப் பத்திச் சொல்றேன்'' என்றார் ஆசிரியர்.

**ரா**மு வீட்டுக்கு வந்து சேரும்போது, வீட்டில் லாந்தர் வெளிச்சம் பரவியிருந்தது. அப்பாவிடம் பெரியப்பா வந்து பேசிக் கொண்டிருந்தார். பெரியப்பாவின் குரலில் விரக்தி. ராமுவைப் பார்த்ததும் அன்புடன் அவனை அழைத்தார்.

''எங்கேடா போய்ட்டு வரே?''

''பாடத்திலே ஒரு சந்தேகம். அதான் கேட்டுக்கிட்டு வரேன்'' என்றான் ராமு.

பெரியப்பாவின் முகம் சுருங்கியது. ''ஏண்டா படிப்பு, படிப்புன்னு நேரத்தை வீணாக்கறே. அந்த நேரத்திலே ஏதாவது வேலை செய்ஞ்சா நாலு காசு கிடைக்குமில்லே. வீட்டுக்கு அது ஒத்தாசையாயிருக்குமில்லே. சரி சரி.... இந்தக் கடிதாசியைப் படி.... டவுன்லேர்ந்து பையன் எழுதியிருக்கான்.''

ராமு பதில் சொல்லாமல் கடிதத்தை வாங்கிப் படித்தான்.

சின்னப்பா, மனைவியைப் பெருமையுடன் பார்த்தான். ''ராமு படிச்சிருக்கலேன்னா, இப்ப இந்த லெட்டரை மட்டும் எப்படிப் படிச்சிருக்கப் போறானாம்?''. என்று கேட்டான் அவன், மனைவியிடம் மெதுவாக.

**ம**றுநாள் காலை.

ராமுவை அழைத்துக் கொண்டு சின்னப்பா வெளியே புறப்பட்டான். ''ராமர் பதினாலு வருஷம் காட்டிலே கஷ்டப்பட்டிருக்கார்டா ராமு'' என்றான் இடீரென்று.

ராமுவுக்கு ஒரே ஆச்சரியம். அப்பாவுக்குக்கூட ராமனைப் பற்றித் தெரிந்திருக்கிறதே!

''உனக்கும் ராமனைப் பத்தி தெரியுமாப்பா?'' என்று கேட்டான் வியப்பாக.

''ம்.''

''எப்படித் தெரியும்?''

''எங்கப்பா எனக்குச் சொன்னார்.''

''உங்கப்பாவுக்கு எப்படித் தெரியும்?''

''எங்கப்பாவுக்கு எங்க தாத்தா சொன்னார்.''

ராமு சிறிது மௌனம் சாதித்தான். அப்புறம் மெல்லிய குரலில் கேட்டான். ''அப்ப எனக்கு மட்டும் ராமனைப் பத்தி நீ ஏம்பா சொல்லலே?''

அந்தக் கேள்வியில் இருந்த உண்மை சின்னப்பாவைத் தாக்கியது. சிறிது தயங்கினான். ''நீ ஸ்கூல்ல கத்துப்பேன்னுதாண்டா ராமு உனக்குச் சொல்லலே'' என்றான்.

மரங்களுக்கு மரம் பட்சிகள் பாடின. ராமு வயது ஒத்த ஒரு சிறுவன் புல்கட்டைச் சுமந்து போனான்.

''ராமு, நான் ஒண்ணு சொல்வேன். கேட்பியா?''

''சொல்லுப்பா'' என்றான் ராமு.

''குளிர் காலம் வரப் போகுதுடா.... டூரிஸ்டுங்க எல்லாம் இனிமே அடுத்த சீசனுக்குத்தான் இந்த ஊருக்கு வருவாங்க. அதனால் எனக்கு இனிமேல் இங்கே வேலை இல்லை.''

சின்னப்பா என்ன சொல்ல வருகிறான் என்று புரியாமல் அவனைப் பார்த்தான் ராமு.

''நான் டவுனுக்குப் போய் ஏதாவது வேலை தேடலாம்னு பார்க்கறேண்டா.''

''எங்களையெல்லாம் விட்டுட்டா?''

''ஆமாடா....'' என்றான் சின்னப்பா. மறுபடியும் தயங்கினான். ''இனிமே நீதான் அம்மாவையும், தங்கச்சி, தம்பியையும் பாத்துக்கணும்'' என்றான்.

ராமு அப்பாவை ஏறிட்டுப் பார்த்தான்.

''ஏதாவது சின்னச் சின்ன வேலையா செய்வியாம். கிடைக்கிற காசை அம்மாவுக்குக் குடுப்பியாம். அதிலே உனக்குன்னு ஒரு பத்து பைசா தினம் வெச்சுக்கோ.''

''அப்ப நான் பள்ளிக்கூடத்துக்குப் போக முடியாதாப்பா?''

''நான் திரும்பி வரவரைக்கும்தாண்டா. நான் திரும்பி வந்தவுடனே நீ மறுபடி பள்ளிக்



ஃபிலிமோத்ஸவில் கலந்து கொண்ட ஒரே தமிழ்ப் படம் 'முதல் மரியாதை. ஹைதராபாத் பாலஸ் தியேட்டரில் படத்தை வெளியிட்ட அன்றைக்கு —

வெளியே ஹைதராபாத் தமிழர்கள் டிக்கெட்டுக்கு அடித்துக் கொண்டார்கள்.

உள்ளே சீனுக்கு சீன், சீனுக்கு சீன் விசில் வரவேற்பு கொடுத்தார்கள். கை தட்டினார்கள். அண்ணன் சிவாஜியை வாழ்த்தினார்கள்.

அங்கே நம் முதல் மரியாதைக்குக் கிடைத்த மரியாதையைக் கண்கூடாகக் கண்டபோது சந்தோஷமாகத்தான் இருந்தது.

பெட்டத ஹூவு என்ற கன்னடப் படத்தின் கதை. தலைப்பிற்கு "மலைப் பூ" என்று பொருள். ஏற்கெனவே நிறைய அவார்டுகளைப் பெற்ற என். லக்ஷ்மி நாராயணன் இயக்கியுள்ள படம். படம் முடியும் தறுவாயில் பார்த்தால் அத்தனை பேர்களும் கண்களைத் துடைத்துக் கொள்கிறார்கள். நாங்களும்! தப்பித் தவறி இந்த பெட்டத ஹூவு படம் உங்கள் ஊரில் ரிலீஸானால் பார்க்காமல் இருந்துவிடாதீர்கள்.



கூடத்துக்குப் போவலாம். நான் ஏதாவது பணம் சம்பாதிச்சு டிரைவர் பாய்கிட்டே குடுத்தனுப்புறேன். நீ வாங்கி அம்மாகிட்டே கொடுத்துடு, என்ன?"

ராமுவுக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. ஆனால் ஸ்ரீராமன் தந்தை கிழித்த கோட்டை இதுவரை தாண்டியதில்லையே!

"சரிப்பா" என்றான்.

சின்னப்பா நகரத்திற்குச் செல்லும் பஸ்ஸில் அன்றைக்கே ஏறிவிட்டான்.

அப்பாவை வழியனுப்பிவிட்டு வரும்போது முத்தண்ணா கடையிலிருந்து அவனைக் கூப்பிட்டான். முத்தண்ணா கடை சின்னக் கடைதான். ஆனால் ராமுவிற்குத் தேவையான விஷயம் அங்கேதான் இருக்கிறது. முத்தண்ணா கடையில் சின்னச் சின்ன சித்திரக் கதை புத்தகங்கள் வைத்திருப்பான். அதைத் தூரத்திலிருந்து பார்த்தாலே பசியாறிவிட்ட மாதிரி இருக்கும் அவனுக்கு. ராமு முத்தண்ணா கடையருகே சென்றான். உடன் அந்தப் புத்தகம் அவன் கண்களில் பட்டது. அழகான வர்ணங்களில் அழகான அமைப்புடன் இருந்த அந்தப் புத்தகம்!

ராமாயணம்!

"முத்தண்ணா, அந்த ராமாயணம் என்ன விலை?"

"புத்து ரூபாய்தான் ராமு."

"பத்து ரூபாயா..... அம்மாடியோவ்!"

"ரொம்ப நல்ல புத்தகம் ராமு."

"ஆமாமாம்.... முத்தண்ணா இதை யாருக்கும் கொடுத்துவிடாதே.... நான் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் சேர்த்து வாங்கிக்கறேன், என்ன?"

"சரி ராமு. நான் இந்தப் புஸ்தகத்தை உனக்காகவே வைத்திருக்கிறேன்."

ராமு புறப்பட்டான். எதிரில் புல்கட்டுடன் கோபி வந்தான்.

"கோபி எனக்கும் இனிமே இந்த வேலையெல்லாம் வாங்கித் தரியாடா?"

"அடடே...... நம்ப பண்டிதரு.....! படிப்பெல்லாம் என்ன ஆச்சு?" என்று கேட்டான் கோபி, யதார்த்தத்தை அவன்தான் முதலில் உணர்ந்தவன் போல!

ராமுவிற்கு வேலை சரியாக இருந்தது. புல்லறுத்துச் சுமையாகக் கட்டிக் கொண்டு போவது. பஸ்ஸில் சுமையுடன் வந்து இறங்கும் பயணிகளின் சுமையைக் கையில் ஏந்துவது. தலையில் தாங்குவது. பகல் முழுக்க வியர்வைதான்.

சம்பாதிக்கும் பணத்தை அம்மாவிடம் கொண்டு வந்து தருவான். பத்து பைசாவை எடுத்து உண்டியலில் போட்டுச் சுவர்ப் பிறையில் வைத்து மேலே காலண்டரைத் தொங்கவிடுவான்.

ராத்திரி நேரங்களில் தாடஜ்ஜாவிடம் புலிக் கதை கேட்கப் போய்விடுவான். தாடஜ்ஜா கிழவன் அந்த நாட்களில் அவன் புலியைச் சுட முயன்றது பற்றி, அந்தப் புலி தப்பித்து ஓடியது பற்றிக் கதை கதையாகப் பாடுவான்.

"ஏன் தாடஜ்ஜா அந்தப் புலி எப்படியிருக்கும்?"

"மஞ்சளாய்க் கண்கள். அதில் ஒரு கண்ணை நான் பெயர்த்துவிட்டேன். அதனாலே ஒரு கண்ணோட அந்தப் புலி பக்கத்து காட்லே சுத்துது. வஞ்சம் தீர்த்துக்கணும்னு காத்திருக்குது."

ஒற்றைக் கண்ணுடன், ஒரு புலியின் உறுமல்! ராமுவிற்கு நடுக்கமாகத்தான் இருந்தது.

ராமு உண்டியலைத் திறந்து காசை எண்ணிப் பார்த்தான். மூன்று ரூபாய் இருந்தது. ராமாயணம் புத்தகத்திற்கு வேண்டியது இன்னும் ஏழே ரூபாய்தான்.

உற்சாகத்துடன் பஸ் ஸ்டாண்ட் பக்கம் போனான். பஸ் வந்தது.

"டிரைவர் பாய்..... எங்கப்பா ஏதாவது பணம் கொடுத்து அனுப்பியிருக்காரா?"

"இல்லை ராமு." என்றார் டிரைவர் பாய்.

கடைக்கார முத்தண்ணா ராமுவை அழைத்தார்.

"என்ன ராமு, புஸ்தகம் வாங்கலியா?"

"இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துக்க முத்தண்ணா. நான் எப்படியாவது அந்தப் புஸ்தகத்தை வாங்கிடறேன்."

எப்படியாவது பணத்தைச் சேர்த்தாக வேண்டும்.

வீட்டுக்கு வந்து அன்றைய மாமூல் பத்து பைசாவை உண்டியலில் போட உண்டியலை எடுத்தான். உண்டியல் காலி!

திக்கென்றது ராமுவிற்கு.

தங்கை பக்கம் பார்த்தான். சாதுவாகப் படித்துக் கொண்டிருந்தாள்.

"ஏய் வசந்தி, இந்த உண்டியல்ல இருந்த பணத்தை நீ எடுத்தியா?" என்று அவளை மிரட்டினான்.

"இல்லேண்ணா...." என்றாள் வசந்தி.

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

கண்களில் மான் மிரட்சி.

''ராமு....'' அம்மாவின் குரல் தயங்கி வந்தது.

''என்னம்மா?'' என்றான்.

''நான்தாப்பா அந்தப் பணத்தை எடுத்தேன். செலவுக்கு இல்லேன்னு. அப்பா டிரைவர் பாய்கிட்டே பணம் குடுத்து அனுப்பின உடனே, நான் அதை உனக்குத் திருப்பித் தந்துடறேன்.''

''சரிம்மா'' என்றான் ராமு சோகமாக.

விருந்தினர் விடுதியில் ஒரு வெள்ளைக்காரி வந்து தங்கியிருக்கிறாளாம். போர்டு எல்லாம் வைத்துக் கொண்டு 'பெயிண்டிங்' பண்ணுகிறாளாம். கேள்விப்பட்டதிலிருந்து ராமுவிற்கு அந்த வெள்ளைக்காரம்மா வரையும் சித்திரங்களைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. ராமு அந்த விருந்தினர் மாளிகை பக்கம் போனான்.

அவனைப் பார்த்தவுடன் ஷர்லி மேடம் அவனை அருகே அழைத்தாள். ஷர்லி மேடத்திற்குக் காலில் ஏதோ அடிபட்டிருந்தது. கட்டுக் கட்டியிருந்தாள். சக்கர நாற்காலியில் தான் வாழ்க்கை நடந்தது.

''ராமு, நான் பூக்களையெல்லாம் வெச்சு ஆராய்ச்சி பண்றேன். அந்த பூக்களைப் படமா வரையறேன். நீ உங்க ஊர்ல இருக்கிற பூவையெல்லாம் கொண்டுவந்து கொடுக்கறியா?''

''ஆகட்டும்மா.''

''ஒவ்வொரு தடவையும் வேறே வேறே பூதான் எடுத்துக்கிட்டு வரணும். நீ அப்படி எடுத்துகிட்டு வர பூவுக்கு நான் காசு தர்றேன். ஒரு பூவுக்கு நாலணா.....''

''ரொம்ப சரிம்மா.''

ராமுவிற்கு சந்தோஷமாய் இருந்தது. அன்றைக்கே இரண்டு பூக்களுடன் போய் எட்டணா சம்பாதித்துவிட்டான்.

வீட்டுக்குத் திரும்பி வரும் வழியில் பஸ் ஹாரன் கேட்டது. ஒதுங்கிக் கொண்டான். ஹாரன் அவனை விடவில்லை. திரும்பிப் பார்த்தான். டிரைவர் பாய்! அவனை அழைத்தார். போனான்.

''உங்கப்பா பணம் கொடுத்து அனுப்பியிருக்காருடா'' என்றுபையிலிருந்துடிரைவர் பாய் பணத்தை எடுத்துக் கொடுத்தார்.

சிட்டுக் குருவி சந்தோஷத்துடன் ராமு வீட்டிற்குப் பறந்தான். அம்மாவிடம் அந்தப் பணத்தைக் கொடுக்க, அம்மா ராமுவிடமிருந்து பெற்ற 'கடனை'த் திருப்பிக் கொடுத்தாள்.

மறுநாள் விடியற்காலையில் ராமு எழுந்து கொண்டான். உண்டியல் எடுத்து மறுபடியும் காசை எண்ணினான். உண்டியலை வைத்துவிட்டுத் திரும்பும்போது பார்வை வசந்தியின் மீது பட்டது. வசந்தியும் தம்பியும் அணைத்துக் கொண்டுபடுத்திருந்தார்கள். போர்த்திக் கொண்டிருந்தார்கள். போர்வையில் ராமுவின் முகம் நுழையும் அளவுக்கு ஓட்டை. அந்த ஓட்டை வழியாகத் தம்பி, தங்கையின் கால்கள் தெரிந்தன. ஏறக்குறைய வெளியே வந்திருந்தன. லேசாக அவை



# போரா? பேச்சுவார்த்தையா?

## போட்டி : 46

ஒரு நல்ல முடிவுக்கு வர ஜெயவர்த்தன அரசுக்கு ஒரு மாதம் கெடு வைத்தார் ராஜீவ். இதற்குப் பதிலளிப்பதுபோல் ஜெயவர்த்தன அரசின் சமீபத்திய அறிக்கை இந்திய அரசின் செயல்பாட்டினைக் கடுமையாக விமர்சிக்கிறது. நிலைமை முற்றி வருகிற இத்தருணத்தில் ராஜீவ் என்ன செய்ய வேண்டும்? இதோ, ''போர்ப் படைகளை அனுப்ப வேண்டும்''; ''பேச்சு வார்த்தைகளைத் தொடர வேண்டும்'' என்ற இரு கருத்துக்களில் ஒன்றை அடித்துவிட்டு, அதன் அடியில் அந்த முடிவுக்கு உங்களை வரச் செய்த காரணங்களுள் மிக முக்கியமான, வலுவான ஒன்றை மட்டும் எழுதுங்கள். உறையின் மீது ''ராஜீவ் என்ன செய்ய வேண்டும்?'' என்று குறிப்பிட்டு இந்த அரைப்பக்கத்தை முழுவதுமாகக் கத்திரித்து அனுப்புங்கள். பிரசுரமாகும் கருத்துக்கள் பரிசு பெறும். தவிர, ஒருவருக்குக் குலுக்கலில் வி. ஜி. பி. ஸ்டேக்கோஸ்.

**முடிவு தேதி : 26.3.86.**

**உங்கள் கருத்துக்கள் அலசப்பட்டு, புள்ளி விவரங்கள் அரசுக்கு அனுப்பப் படும். எனவே, தவறாமல் இந்த மக்கள் கருத்தறியும் பணியில் பங்கு பெறுங்கள் :**

ராஜீவ் போர்ப் படைகளை அனுப்ப வேண்டும்

---

ராஜீவ்பேச்சு வார்த்தைகளைத்தொடர வேண்டும்

காரணம்.

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

# வி.ஜி.பி. ஸ்டேக்கோஸ் பரிசுத் திட்டம்




தூக்கத்தை முழு அளவில் பெற... டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.







இன்பமான தூக்கத்திற்கும் இனிதான கனவுகளுக்கும்... டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
போர்ட், பம்பாய் 400 023. போன்: 273831

everest/86/BCL 32-tm

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு வினியோகஸ்தர்கள்: சாந்தி லால் பிரதர்ஸ், 7, காசி செட்டி சந்து, இரண்டாவது மாடி, சென்னை—600 001. போன்: 32886.

நடுங்குகிறாற் போலக் கூடத் தோன்றியது. போர்வையை இழுத்து ஓட்டை இல்லாத பக்கமாகப் பார்த்து நன்றாகப் போர்த்தி விட்டான். 'ம் பரவாயில்லே' என்று திருப்திப் பட்டுக் கொள்கிற மாதிரி இப்போது நிலே மாறி இருந்தது.

ஷேர்லி மேடம் அவனே எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் போலும். அவனேப் பார்த்தவுடன் சிரித்தாள். போர்டில் இன்றைக்கு வேறு தினுசான பூ ஒன்று வரையப் பட்டிருந்தது. ஐந்து நாகத் தலே போல அதன் இதழ்கள், சிவலிங்கம் போல அதன் காம்புப் பகுதி. விசித்திரமான பூவாய் இருந்தது அது.

''ராமு அந்தப் பூவை மாத்திரம் எனக்குக் கொண்டு வந்து கொடு. உனக்கு ஐந்து ரூபாய் தருகிறேன்'' என்றாள் ஷேர்லி மேடம்.

ஐந்து ரூபாயா? ராமாயணப் புத்தகம்! அதுதான் எவ்வளவு பக்கத்தில் வந்துவிட்டது!

''இது என்ன பூ மேடம்?''

''மலேப் பூ.... உங்கள் ஊரில் இருக்கிறதாம். ஆனால் யாருமே என்னிடம் அதைக் கொண்டு வந்து கொடுக்க மாட்டேன் என்கிறார்கள்'' என்றாள் ஷேர்லி மேடம்.

''நான் கொண்டு வந்து தர்றேன் மேடம்'' என்றான்.

''வெளியே ஓடி வந்தான்.'' அந்தப் பூ எங்கே கிடைக்கும்?'' — ஆசிரியரைக் கேட்டான்.

''கேள்விப்பட்டிருக்கேன். அது காட்டுலே தான் இருக்குமாம். உனக்கெல்லாம் கிடைக்காது ராமு'' என்றார்.

''காட்டுக்குள்ள இருக்கிற எங்களுக்கே கிடைக்கலே. 'உனக்கெங்கே கிடைக்கப் போவுது.'' என்று காட்டுக்குள் வேலே செய்யும் ஒருவர் சொன்னார்.

தாடஜ்ஜாவைப் போய்க் கேட்டான். ''நான் அந்த நாள்லே பார்த்திருக்கேன். இப்ப அதெல்லாம் எங்க இருக்குன்னே தெரியலேயேடாப்பா.'' என்று சொல்லிவிட்டார்.

எப்படியும் அந்தப் பூவை எடுத்து வந்தே தருவது என்று முடிவு செய்து கொண்டான் ராமு.

மறுநாள் விடியற்காலே. சுவர்க் கோழி மட்டும் ஒளிந்து கத்தியது. ராமு எழுந்து கொண்டான். அம்மா அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். வசந்தியும் தம்பியும் அசையாமல் படுத்திருந்தார்கள்.

ராமு வெளியே வந்தான். அடர்த்தியான பனி தலேயை உடலே மூடியது. உடல் நடுங்க, நடுங்கக் காட்டுப் பக்கம் நடந்தான். கையில் ஷேர்லி மேடம் கொடுத்த கூடை.

திடீரென்று அவனுக்கு தாடஜ்ஜா கிழவன்




ஜீவனம் நடத்துவதற்கு எதெது அத்தியாவச்யமோ அதற்குமேல் ஒரு துரும்பு கூட வைத்துக் கொள்ளாமலிருப்பதுதான் முறை. எதெது இல்லாவிட்டால் நம்மால் ஜீவிக்கவே முடியாதோ, அவற்றோடு நம் தேவைகளே நிறுத்திக் கொள்ள வேண்டும் என்பதுதான் தர்ம சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிற 'அபரிக்ரஹம்' என்ற உயர்ந்த கொள்கை. ஆகையால் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான அர்த்தம் (பொருள்) இருந்தும் அதற்கு மேல் ஒருத்தன் (அர்த்தார்த்தி) பகவானிடம் ப்ரார்த்திக்கிறான் என்றால் அது பேராசைதான்; எனவே அது தப்புதான். ஆனால் இவனேயும் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மா நாலுவித பக்தர்களில் ஒருத்தனுக ச்லாகித்துச் சொல்கிறார் என்றால், அதற்கு ஒரு தினுஸான அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

அதாவது லோகத்தில் பலவிதமான தர்ம கார்யங்கள், ஸமூகப் பணிகள் நடந்தாக வேண்டியிருக்கிறது. ஒரு கோயிலேப் புனருத்தாரணம் பண்ணிக் கும்பாபிஷேகம் நடத்த வேண்டியிருக்கிறது. பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி வைக்க வேண்டியிருக்கிறது. அநாதாச்ரமங்கள் வைக்க வேண்டியிருக்கிறது. வேத வித்துக்களே ரக்ஷிக்க வேண்டியிருக்கிறது. இப்படிப் பல பெரிய கார்யங்கள் நடந்தாக வேண்டியிருக்கிறது. இவற்றுக்கெல்லாம் நிறையப் பணம் தேவைப்படுகிறது. இந்தப் பணம் எங்கிருந்து வரும்? தங்கள் செலவுக்குப் போக தர்மம் செய்யக் கூடிய தனிகர்கள் இருந்தால்தானே அவர்களிடமிருந்து நல்ல காரியங்களுக்காக த்ரவ்யம் கிடைக்க முடியும்? இந்த மாதிரி, தனக்கென்று இல்லாமல், தன் தேவைக்கு மேற்பட்டதை லோகோபகாரமாக தர்மம் பண்ணுவதற்கே ஒரு அர்த்தார்த்தி பகவானிடம் ப்ரார்த்தனே பண்ணினால், அப்படிப்பட்ட ப்ரார்த்தனேயை பகவான் ஒப்புக் கொள்கிறார் என்று வைத்துக் கொள்ளலாம்.

மொத்தத்தில் ஞானியாகவும் ஞானத்தைத் தேடும் ஜிஜ்ஞாஸுவாகவும்தான் இருக்க வேண்டுமென்பதில்லே — ஆர்த்தனுகவோ, அர்த்தார்த்தியாகவோ இருந்தால் கூடப் பரவாயில்லே; ஏதாவது ஒருவிதத்தில் பகவான் என்று ஒருத்தனே நம்பி அவனிடம் போய் விட்டால் போதும்.

கொஞ்சம் கொஞ்சமாக இவனே ப்ரார்த்தனே மேலே அழைத்துக் கொண்டு போகும்.

ப்ரார்த்தனே பண்ணுகிற வழக்கம் எப்படியோ ஒருவிதத்தில் ஏற்பட்டு விட்டால் தானுகவே அது கால க்ரமத்தில், ஆத்மாபிவருத்திக்காக மட்டும் ப்ரார்த்திக்கிற நிலேக்குக் கொண்டு விட்டுவிடும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

## இரண்டே சொற்களில்...

உலகின் ஞானத்தையெல்லாம் பிழிந்தெடுத்தால் இரண்டே சொற்களில் அடக்கி விடலாம்.

பொறுத்திரு: நம்பிக்கையுடனிரு.

— அலெக்சாந்தர் டூமாஸ்.



— சு. முருகன்.

சொன்ன புலிக் கதை ஞாபகத்தில் வந்தது. ஒற்றைக் கண் புலி. அதன் உறுமல். காட்டுக்குள்ளேயே வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்காகச் சுற்றிக் கொண்டிருக்கிறது என்று தாடஜ்ஜா சொல்லியிருக்கிறாரே!

நடுக்கம்தான். காட்டுப் பக்கம் நெருங்க நெருங்க இதயம் வேகவேகமான படக் படக்! இருந்தாலும் ராமாயணப் புத்தகம். முத்தண்ணா கடையில் அவனுக்காகவே அந்தப் புத்தகம் இன்னும் காத்திருந்தது.

காட்டிற்குள் நுழைந்தான். நதியின் சலசல. மூங்கில் மரங்களின் நடுவே ஓடிப் பிடித்து விளையாடிய காற்று. நீலமான ஆகாயத்தில் வெள்ளை மேக அன்னங்களின் நடை. காடு இனிமையாய்இருந்தது.இருந்தாலும்சின்னச் சின்ன புதர்ச் சலனங்கள் அவன் இதயத் துடிப்பை அதிகரித்தன. ஓர் இடத்தில் 'சிலுபுலுக்' என்று புதரில் சத்தம் கேட்டு, பயந்து, கிட்டத்தட்ட மயக்கம் போடுகின்ற நிலையில், அந்தப் புதரிலிருந்து ஒரு பால் வெள்ளை முயல், பழுப்புக் கண்களுடன் தாவித் தாவி ஓடியது. நதி நீரில் முகம் அலம்பிக் கொண்டான். தண்ணீரை வேண்டிய மட்டும் அள்ளி அள்ளிக் குடித்தான். ஏதோ அரவம் கேட்டு நிமிர்ந்தான். பார்த்தால், இரண்டே இரண்டு விழிகள் தெரிந்தன. அவனையே உற்றுப் பார்த்த விழிகள்.

'அய்யய்யய்யோ..... புலி! நிஜமாகவே புலி! அவனுக்கிருந்த ஒரே சட்டை முள்ளில் மாட்டிக் கிழிந்தது. சுற்றுமுற்றும் பார்த்துப் பக்கத்து மரத்தில் தாவி ஏறினான். கூடை ஒரு பக்கம் உருண்டு போனது. மரத்தின் மேலிருந்து அந்த விழிகளைப் பார்க்க, அந்த விழிகள் அசைந்து, மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டு..... ச்சே..... அழகான கொம்புகளுடன் ஒரு கலைமான் புயல் போல ஓடத் தொடங்க.... ராமு கலீர் என்று சிரித்தான். ஸ்ரீராமனுக்கு நன்றி செலுத்துவதற்காகத் தலையை நிமிர்த்தினால்.....

ஆஹா! என்ன இது? கனவா இல்லை நிஜமா? அந்த மரத்தின் உச்சியில் அவன் தேடி வந்த மலைப் பூ கொத்துக் கொத்தாக, கொத்துக் கொத்தாகப் பூத்திருந்தது.

"ரொம்பத் தேங்க்ஸ்" என்றாள் ஷர்லீ மேடம். "ஐந்து ரூபாய்தானே தருகிறேன் என்று சொன்னேன். இவ்வளவு கஷ்டப்பட்டு இந்தப் பூக்களைக் கொண்டு வந்திருக்கிறாய். பத்து ரூபாயாக வைத்துக் கொள்" என்று ஷர்லீ மேடம் கருணையை மழையாகப் பொழிந்தாள்.

ராமு தடதடவென்று வீட்டைப் பார்த்து ஓடி வந்தான். "அம்மா.... அம்மா.... அந்த ஷர்லீ மேடம் எனக்கு அஞ்சு ரூபா தந்தாங்க. இந்தா நீ மூணு ரூபா வெச்சுக்க. நான் ரெண்டு ரூபாயை வெச்சுக்கறேன்" என்று வாழ்நாளிலேயே முதன் முறையாக ஒரு பொய்யைச் சொன்னான். ராமாயணப் புத்தகமாயிற்றே!

உண்டியலைத் திறந்தான். மூன்று ரூபாயை எடுத்துக் கொண்டான். அந்த மூன்று. ஷர்லீ மேடம் கொடுத்த இரண்டு ரூபாய். அப்புறம் பொய்யால் விளைந்த ஐந்து ரூபாய். பத்து ரூபாய். பத்து ரூபாயி!

"எங்கேடா ராமு ஓடறே?" என்று பார்வதி கத்தினாள்.

"இதோ வந்துடறேம்மா."

மூச்சிரைத்தது. முத்தண்ணா கடை இன்னும் கொஞ்ச தூரம்தான்.

திடீரென்று அந்த முனகல் கேட்டது. திரும்பிப் பார்த்தான். நடைபாதையோரம் ஒரு கிழவன். குளிரில் நடுங்கினான். முனகினான். கிழிந்த போர்வை அவனைச் சரியாக மூட முடியாமல் திணறியது.

முத்தண்ணா ராமுவைப் பார்த்து உற்சாகக் குரல் கொடுத்தார். "வா, ராமு... வா... வா.... காசு சேர்த்திட்டே போல இருக்கு. ராமாயணப் புஸ்தகம் உனக்காகவே காத்திட்டிருக்கு" என்றார்.

ராமு கடைக்கருகே செல்லாமல் நின்றான். திடீரென்று அவன் மனத்தில் அந்தப் போராட்டம். ஒரு தீர்மானத்திற்கு வந்தான்.

"இரு முத்தண்ணா வந்துடறேன்" என்று கடையை விட்டு விலகி நடந்தான். சிறிது தூரத்தில் போர்வைகள் விற்கும் அந்தக் கடை இருந்தது.

பத்து ரூபாய்க்கு ஒரு போர்வையை வாங்கிக் கொண்டான். முத்தண்ணா கடைக்கு வந்தான். "முத்தண்ணா, அந்த ரராமாயண புஸ்தகத்தை வெச்சுக்கோ. வித்துடாதே. என்னிக்காவது ஒருநாள் நான் அதைவாங்கத்தான் போறேன்."

வீட்டுக்கு ஓடி வந்து அம்மாவிடம் நீட்டினான். அம்மா வாங்கிப்பிரித்தாள். "போர்வை ரொம்ப நல்லா இருக்குடா.... ஏதுடா இது. புதுசா இருக்கே. காசு ரொம்ப ஆகுமே..."

"என்னை மன்னிச்சுடும்மா. நான் உங்கிட்டே ஒரே ஒருபொய்சொல்லிட்டேன். ஷர்லீ மேடம் பத்து ரூபா கொடுத்தாங்க. நான் ராமாயணம் வாங்கணும்னு நெனைச்சு அஞ்சு ரூபாயை எடுத்துக்கிட்டேன். அப்புறம் வசந்தியும், தம்பியும் கிழிஞ்ச போர்வையில் கஷ்டப்படறதைப் பார்த்தேன். அதான் ஒரு போர்வை வாங்கிட்டேன். இந்தக் குளிர் காலத்துக்கு உதவியா இருக்குமில்லே...."

பார்வதி அவன் தலையைத்தடவிக் கொடுத்தாள். பேச முடியாமல் தவித்துக் கண்ணில் நீர் பெருக்கினாள். ராமு அம்மாவைக் கவனிக்காமல் அந்தப்போர்வையை எடுத்துத்தங்கையின் மீதும், தம்பி மீதும் நன்றாக மூடுகிற மாதிரி போர்த்திவிட்டான்.

எல்லோரும் தூங்கியான பிறகு அவன் மட்டும் குத்துக்காலிட்டு உட்கார்ந்தான். மெதுவாக அழத் தொடங்கினான்.

— ஜெயமன்மதன்.

# சித்தரஞ்சனி

## 33. வெற்றி மணி

சித்தரஞ்சனியின் அழகிய உடல் மீது தனது போர்த் திட்டத்தை விளக்கிக் காட்டிய கௌதமிபுத்ரன் தனது கைவிரலால் அவளது கழுத்திலிருந்து வயிறு வரை ஒரு கோட்டை இழுத்துக் காட்டி, "இப்படி ஒரு சிறு படையை மலைமீதிருந்து கீழே இறக்கப் பார்க்கிறான் நாகபாணன். இன்னொரு படை உன் காலிலிருந்து அதாவது கடற்புறத்திலிருந்து மேலே ஏறிவரும். இன்னொரு பகுதி உன் இடையிலிருந்து குறுக்கே வந்து வயிறு இருக்கும் பகுதியுடன் இணையும். இந்த மூன்று பகுதிகளுக்குள் நம்மைச் சிக்க வைப்பது நாகபாணன் திட்டம்" என்று கூறினான்.

அவன் ஆள்காட்டி விரல் தனது உடலின் பல பகுதிகளில் பட்டதால் சிறிது உணர்ச்சி வசப்பட்டாலும் அடுத்துவரும் போரிலிருந்த சிரத்தையின் காரணமாக "நாகபாணன் மனத்திலிருக்கும் திட்டம் உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று வினவினாள்.

"நாகபாணனிடம் நம்மைவிடப் படை பலம் அதிகமிருக்கும். ஏற்கெனவேயுள்ள படையைத் தவிர மரக்கலங்களில் புதுப் படைகளை வரவழைத்திருக்கிறான். அவற்றை மலைச் சரிவின் வடக்குப் பகுதியில் நிறுத்தியிருக்கிறான். இன்னொரு பகுதி கோட்டையிலிருக்கிறது. கோட்டைப் படைகள் நேராக நதிக்குக் குறுக்கில் வந்தால் மலைவாசிகள் அம்பும் வேலும் எறிந்து கொன்று விடுவார்கள். ஆகவே அப்படை சிறிது சிறிதாக இரவு நேரத்தில் ஆற்றின் ஓட்டத்தோடு ஓட்டமாக முகத்துவாரத்துக்கு அனுப்பப்படும். அங்கிருந்து மலைமீது ஏறிவரும். அப்பொழுது வடக்குப் பகுதியிலிருக்கும் யவனர் படை மலை மார்க்கத்தில் குறுக்கே வந்து இணையும். அதற்கு நடுவில் நாம் சிக்கினால் இருபக்கங்களிலும் சுத்த ரிக்கப்படுவோம். அதே சமயத்தில் நாகபாணன் ஒரு சிறு படையை மலைமீது நாம் அறியாமல் பின்புறமாக ஏற்றி உச்சியிலிருந்து இறக்கிப் பின்புறமாகத் தாக்குவான். அனுபவசாலியான ஒரு படைத் தலைவன் செய்யக் கூடியது இதுதான்" என்று எதிரியின் திட்டத்தை எடுத்து விளக்கினான்.

இதைக் கேட்ட சித்தரஞ்சனி பிரமித்தாள். சிறிதும் அப்பழுக்கில்லாத இந்தத் திட்டத்தை எதிர்ப்பதும் தடுப்பதும் அத்தனை சுலபமல்லவென்றும் நினைத்தாள். அதனால் கேட்டாள்: "இந்தத் தாக்குதலை நாம் எப்படிச் சமாளிப்பது?" என்று.

"எதிரி எதிர்பார்ப்பதை நாம் செய்யக் கூடாது. அவன் முற்றும் எதிர்பாராதவிதத்தில் அவன் படைகளை நாம் சமாளிக்க வேண்டும்" என்றான் சாதவாகனன்.

"எப்படிச் சமாளிக்கப் போகிறீர்கள்?" என்று வினவினாள் சித்தரஞ்சனி. அவள் குரலில் கவலை பெரிதும் ஒலித்தது.

சாதவாகனன் அவள் கவலையைக் கண்டு புன்முறுவல் செய்தான். "சித்தரஞ்சனி! என்னிடம் உனக்கு நம்பிக்கையில்லை போல் தெரிகிறது" என்றான் புன்முறுவலின் ஊடே.

"எதிரியின் படைபலம்..." என்று நீட்டினாள் சித்தரஞ்சனி.

"அதிகம்..." என்று நகைப்பொலி தோன்றப் பதில் சொன்னான் சாதவாகனன்.

"அதனால்தான் கவலையாயிருக்கிறது!"

"சித்தரஞ்சனி! படைபலம் மாத்திரம் போர்களில் வெற்றியளிப்பதில்லை. புத்தி பலமும் வேண்டும். அதற்கு இங்கு குறைவில்லை."

அவன் ஏதோ தற்பெருமை பேசுகிறான் என்று நினைத்த சித்தரஞ்சனி அன்று அவன் அவளைத் தழுவியபோது அவனை இரும்புப் பிடியாகத் தழுவினாள். அன்றிரவில் அடிக்கடி பெருமூச்சும் விட்டாள். மறுநாள் முதற்கொண்டு அவன் காட்டிய அலட்சியம் அவள் கவலையைப் பன்மடங்கு அதிகப் படுத்தியதால் வேதனை நிரம்பிய உள்ளத்துடன் நாட்களைக் கழித்தாள்.

மறுநாட்காலையிலிருந்து படையெடுப்பைப் பற்றிச் சாதவாகனன் அடியோடு மறந்துவிட்டதுபோல் தோன்றியது அவளுக்கு. மறுநாட்காலை எழுந்து நீராட்டத்தை முடித்துக் கொண்ட சாதவாகனன் பூஜாரிக்குச் சொல்லியனுப்பி அவருடன் ரகசியமாகப் பேசினான். அன்று முதல் தாபிலேசுவரருக்கு அபிஷேக ஆராதனைகள் தடபுடலாக நடந்தன. சாதவாகனன் உத்தரவுப்படி காஷ்டாளன் ஆலயமணியைப் பெரிதாக அடித்தான். சண்டிகாதேவிக்கும் பூஜை புனஸ்காரங்கள் அமர்க்களமாக நடந்தன. இதையெல்லாம் கவனித்த நாகபாணனின் ஒற்றர்

சாண்டில்யன்.

கள் விஷயத்தை நாகபாணனுக்குச் சொல்ல, "சாதவாகனன் தெய்வ பலத்தால் நம்மை முறியடிக்கப் பார்க்கிறான் போலிருக்கிறது!" என்று ஏளனமாகக் கூறினான். எப்படியும் இந்தப் பூஜைகள் இரண்டு மூன்று நாட்களுக்கு மேல் நீடிக்காதென்றும் படை அணி வகுப்பு நடக்குமென்றும் நினைத்த நாகபாணன் ஏமாற்றமே அடைந்தான். நாள் செல்லச் செல்ல பூஜை மணிதான் அதிகமாகக் கேட்டதேயொழிய, போர்ச் சங்குகளோ தாரைகளோ ஒலிக்கவில்லை. இரவிலும் தாபிலேசுவரர் கோவிலுக்கருகில் பூரண நிம்மதி நிலவியதைக் கவனித்த நாகபாணன், போர் நடக்குமா? சாதவாகனன் சித்தரஞ்சனியை அழைத்துக் கொண்டு ஓடிவிடுவானா? என்று சந்தேகமும் கொண்டான். "சே, சே! ஒருநாளும் அவன் ஓடமாட்டான். மகாவீரன். தன்னந்தனியாக இங்கு வந்தவன்" என்று சாதவாகனனுக்கு அனுகூலமாகச் சமாதானமும் சொல்லிக் கொண்டான். இருப்பினும் சாதவாகனன் போக்கு அவனுக்குப் புரியாத புதிராகவே இருந்தது.

அவனுக்கு மட்டுமல்ல. அவனது படை வீரரும் ஏதும் புரியாமல் திண்டாடினார்கள். சாதவாகனன் அடிக்கடி மலைக்குப் பின்புறத்தில் நிறுத்தப்பட்டிருந்த தனது படைப்பிரிவுக்குச் சென்று அங்கிருந்த தலைவர்களுடன் அதிக நேரத்தைக் கழித்து வந்தான். சிலவேளைகளில் சித்தரஞ்சனியையும் அழைத்துச் சென்று "நீ இந்தப் படைகளுக்குத் தலைவியானதால் இவர்களை நடத்துவது உன் பொறுப்பு," என்று கூறினான்.

"படைகளை நடத்தி எனக்குப் பழக்கமில்லையே" என்றாள் சித்தரஞ்சனி.

"பௌர்ணமியன்று போர் துவக்கத் திட்டமிட்டிருக்கிறான் நாகபாணன். அன்று நள்ளிரவில் நீ பழையபடி பிசாசாகிவிடு. பழைய சப்தஸ்வர ராகத்தை இரைந்து பாடு. மலைப் பகுதி முழுவதும் அது எதிரொலி செய்யட்டும். மும்முறை பாடு. அது முடிந்ததும் உனது புரவியில் ஏறித் தாபிலேசுவரர் கோவிலுக்கு வந்து கதவை மூடித் தாழிட்டுக் கொள்" என்று கூறினான்.

அவன் போக்கு அவளுக்கு அடியோடு புரியவில்லையென்றாலும் காஷ்டானனின் மந்த புத்திக்கு அது விளங்கியது. காஷ்டானனை மறுநாள் சந்தித்து, "தளபதி! நமது படைகளை நான்காகப் பிரித்துவிடு. எதிரிப் படைகள் வரும்போது அவை நான்கு பிரிவுகளாக எதிரியைத் துண்டிக்கட்டும். நான் ஒரு சிறு பிரிவுடன் தாபிலேசுவரர் கோவிலுக்கு அருகில் இருப்பேன். நான் சங்கு எடுத்து ஊதும்பொழுது புலரும் சமயமாயிருக்கும். போரும் முடிந்துவிடும்" என்று தனது திட்டத்தைத் தெரியப்படுத்தினான்.

பௌர்ணமி தினமும் நெருங்கிக்கொண்டிருந்தது. கோட்டைப் பகுதியிலும் கடற்பகுதியிலும் எதிரி நடமாட்டம் அதிகமா





யிருந்தது. எதிரி வீரர்கள் அணிவகுத்து நடந்தார்கள். வீரர்களுடன் கூடிய படகுகள் நதியின் முகத்துவாரத்துக்கும் மரக்கலங்களுக்கும் போய்ப் போய் வந்து கொண்டிருந்தன. பௌர்ணமி தினமும் வந்தது. முதல் ஜாம முடிவிலேயே எதிரியின் படகுகள் முகத்துவாரத்துக்குத் துரிதமாக வரத் தொடங்கின. அவற்றிலிருந்து இறங்கிய வீரர்கள் மலையடிவாரத்தில் மறைந்தனர். வடக்குப் பகுதியிலிருந்த யவனர் படை அணிவகுத்துப் பெரும் சுவர் போல் சித்தமாக நின்றிருந்தது. இரண்டாவது ஜாமம் முடிந்து நடுநிசியும் வந்தது. பூர்ண சந்திரன் ஜகஜ்ஜோதியாக வானவீதியில் வலம் வரத் தொடங்கினான். மலையிலும் கடலிலும் அவன் வெண்மை ஒளி படர்ந்தாலும் அன்று என்னவோ ரம்மியமான சூழ்நிலைக்குப் பதில் ஒரு பயங்கரத்தையே சிருஷ்டித்திருந்தது. அந்தச் சமயத்தில் சித்தரஞ்சனியின் மென்மையான குரல் இசைக்கத் தொடங்கி, வரவர அதன் ஒலி வன்மை பெற்று மலைப்பகுதி முழுவதும் ரீங்காரம் செய்தது.

அந்த ரீங்காரம் விளைந்ததையொட்டி இரு சங்கங்கள் ஒலிக்க, நாகபாணனின் படை மலையடிவாரத்திலிருந்து க்ஷத்ரபன் தலைமையில் மலைமீது ஏறத் துவங்கியது. பாதி புரவிப் படையும் பாதி காலட்களாகவுமுள்ள படையை க்ஷத்ரபன் நடத்திச் சென்றான். முதலில் காலாட்களை ஏறச் சொல்லி அவர்களுக்குப் பின்புறத்தில் புரவிப்படையின் வேலெறிவோரைப் பாதுகாப்பாக ஏவினான். அதே சமயத்தில் மலையின் வடக்குப் பகுதியிலுள்ள யவனர் படை யவனன் தலைமையில் குறுக்கே புகுந்தது. சற்றுத் தூரம் எந்த இடைஞ்சலுமின்றி இரு படைகளும் முன்னேறின. இரண்டும் சந்திக்கச் சிறிது தூரமே இருந்த சமயத்தில் சித்தரஞ்சனி மூன்றாம் முறை தனது குரலைப் பெரிதாக உயர்த்திப் பாடினாள்.

அந்தப் பாட்டு முடியு முன்பாகவே எங்கிருந்தோ படைகள் மலைமீதிருந்து இறங்கும் ஒலி கேட்கவே யவனன் தனது படையைச் சிறிது நிறுத்தினான். நிறுத்தி அவன் ஒழுங்காக அணிவகுப்பதற்குள்ளாகவே சாதவாகனனின் படை நான்காகப் பிரிந்து அவன் படையை மூன்று இடங்களில் மூன்று பகுதிகளில் ஊடுருவ, ஒரு பகுதி மட்டும் மலையேறி வந்த க்ஷத்ரபன் படை மீது பாய்ந்தது.

மலைமீதிருந்து வந்த புரவிப் படைகளின் வேகத்தாலும் உக்கிரத்தாலும், இத்தகைய தாக்குதலைஎதிர்பாராததாலும்யவனன்படை சிறிது இணறினாலும் சமாளித்துக் கொண்டு திரும்பித் தாக்கியது. யவன வீரர்களின் பெரும் கேடயங்களும் கனமான வாட்களும் ஓரளவு சேதத்தை விளைவித்தாலும் சாதவாகனர்களின் வேலுக்கும் வில்லவர்கள் தொடுத்த கணைகளுக்கும் இலக்கானதால் யவனர்கள் கலைந்து பிரிந்து நாசமாகத் தொடங்கினர். பிரிக்கப்பட்ட படை திரும்பவும் சேர முடியாததால் தனித்தனியே



வீட்டுக்காரர்: பீரோவைச் சுத்தமாத் துடைச்சுடாதேப்பா. ஒரு ஐம்பது பைசாவாவது வச்சுட்டுப் போ!

முகமூடி கொள்ளைக்காரன்: ஏன்?

வீட்டுக்காரர்: போலீசுக்குப் போன் பண்ண இந்த ராத்திரில எவன்கிட்ட போய்க் கடன் கேட்பேன்?

— கிரிஜா. மணாளன்.

போரிட்டன. மலைமீது ஏறிவந்த க்ஷத்ரபன் படையும் தங்கள் மீது திடீரெனப் பாய்ந்த காஷ்டானனின் படையால் சிறிது தடைப்பட்டாலும் காஷ்டானன் மீதிருந்த கோபத்தில் க்ஷத்ரபன் தனது உத்தேச மாப்பிள்ளையைக் கொல்லும் நோக்கத்துடன் தனது புரவிமீது வாளைப்பெரிதாகஓங்கிக்கொண்டு வந்தாலும் திடீரென எங்கிருந்தோ பாய்ந்த வேல் அவன் மார்பில் தைக்க அவன் புரவியிலிருந்து சாய்ந்துவிட்டான்.

இப்படித் தனது படை கலகலத்துப் போனதை மலைமீதிருந்த தனது சிறிது படையுடன் பார்த்த மகாக்ஷத்ரபனை நாகபாணன், சித்தரஞ்சனி தாபிலேசுவரர் ஆலயத்தை நோக்கித் தன்னந்தனியாக ஓடி வருவதைக் கண்டு தனது படையுடன் அவளை மறித்துத் தூக்கிப் போக இறங்கினான். சித்தரஞ்சனி வெகுவேகமாகக் கோவிலுக்குள் ஓடிக் கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டாள். ''அந்தக் கதவை உடையுங்கள். நமது திட்டங்களுக்கு யமனாக வந்த அந்தப் பிசாசைஒழித்துவிடுகிறேன்'' என்றுஇரைந்த வண்ணம் கோவிலுக்கு முன்பு தோன்றினான் நாகபாணன். அவன் வீரர்களில் இருவர் இறங்கி, அவன் ஆணையை நிறைவேற்ற முற்பட்டபோது எங்கோ இருந்து, ''கோவிலை நாசம் செய்பவன் நாசமாகிவிடுவான்'' என்று ஒரு குரல் எழுந்தது. அடுத்த கணத்தில் தனது பெரிய புரவி மீது அமர்ந்த சாதவாகனன், பூரண போர்க் கோலம் பூண்டு நாகபாணனை நோக்கி வந்தான். அடுத்த விநாடி தாபிலேசுவரர் கோவில் முகப்பு ரணகளமாயிற்று. சாதவாகனனின் வீரர்கள் நாகபாணனின் வீரர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். சாதவாகனனை நோக்கி நாகபாணனே எதிர்த்து வந்தான். அவனது வேகமான வாளைத் தனது வாளால் அனாயாசமாகத் தடுத்தான் கௌதமிபுத்ரன். தனக்கு உதவ வர முயன்ற வீரர்களை, ''இந்தச் சண்டையில் எங்கள் மத்தியில் யாரும் வரவேண்டாம்'' என்று உத்தரவிட, மற்ற வீரர்கள் அகலவே இருவரும் உக்கிரமாகப் போரிட்டார்கள். பல போர்களில் வாகை சூடிய நாகபாணன் தனக்கு இணையாக ஒரு வீரனைச் சந்தித்துவிட்டதால் உற்சாகத்துடனும் உக்கிரத்துடனும் போராடினான். அவன் உக்கிரம் அனைத்தையும் நிதானத்துடன் போரிட்ட சாதவாகனன் சந்தித்தான். சாதவாகனனின் வாள் தனது வாளின் பாதுகாப்பை மீறி அடிக்கடி தனது கண் முன் தோன்றுவதைக் கண்டான் நாகபாணன். மிகத் தந்திரமும் சாமர்த்தியமும் கொண்ட எதிரியைத் தான் சந்தித்துவிட்டதை உணர்ந்து கொண்ட ஆத்திரத்தில் மும்முரமாக வாளைச் சுழற்றியவன் இரண்டாவது முறை சாதவாகனனின் வாள் தனது வாளை அந்தரத்தில் பறக்கவிட்டதைக் கண்டதும், ''சாதவாகனா! முடித்துவிடு என்னை'' என்று கூவினான்.

பதிலுக்குச் சாதவாகனன் தனது சங்கை எடுத்து ஊதவே மலைவாசிகள் சாரிசாரியாக வந்தனர். மலையெங்கிலும் ஆங்காங்கு நடந்த போர் மெள்ளக் குறையத் தொடங்கியது. மலை பல இடங்களிலும் செவ்வாடை புனைந்து நின்றது.

காஷ்டானன், யவனன் படைப் பிரிவுகள் பெரும் சேதத்துடன் பின்வாங்கிக் கொண்டிருந்தன. ''நாகபாணா! போர் முடிந்துவிட்டது. மீதிப் படைகளை அழைத்துக் கொண்டு நீ போய்விடு. இங்கு உன் தளத்துக்குப் பதில் நான் தளம் அமைக்கிறேன். இங்குள்ள மலைவாசிகள் இனிச் சுதந்திரமாக வாழ்வார்கள்'' என்று சாதவாகனன் கூறினான்.

போர் நிறுத்தத் தாரைகள் எங்கும் சப்திக்கச் சித்தரஞ்சனி கோவில்கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். நாகபாணன் அவளை ஒருமுறை நோக்கினான் உஷ்ணத்துடன். பிறகு நிராயுதபாணியாக மலைச்சரிவில் இறங்கிச் சென்றான். கோவிலின் படிகளில் ஏறிச் சென்ற சாதவாகனனைப் பெருமிதத்துடன் நோக்கினாள் சித்தரஞ்சனி. அடுத்தகணம்நாகபாணனின்வாளால்காயப்பட்டிருந்த அவன் உடலை அனைவர் முன்னிலையிலும் தழுவினாள்.

பொழுதும் மெதுவாகப் புலர்ந்தது. முண்டங்களும் குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடந்த சடலங்களும் நிரம்பிக் குருதியால் சிவந்த ஆடை பூண்ட தாபோல் மலையை அருணனும் தனது சிவந்த கிரணங்களால் தழுவி அதிகச் சிவப்பை எங்கும் பரப்பினான்.

போரின் கோலம் எங்கும் விரிந்து கிடந்தது. படகுகள் துறைமுகத்தில் யாருமில்லாத அனாதைகளாக ஆடி நின்றன. மலையில் காயமுற்றோரின் அவலக் குரல் எங்கும் கேட்டது. படுகாயமடைந்த புரவிகள் இட்ட ஓலம் பயங்கரத்தை விளைவித்தது. சற்று நேரத்திற்கெல்லாம் தாபிலேசுவரர் ஆலயமணி அடித்தது. எது நின்றாலும் பூஜை நிற்கக் கூடாது என்று பூஜாரி பூஜா திரவியங்களுடன் ஆலயத்துக்குள் நுழைந்தார். அடுத்து பூஜை மணியை அடித்தார். அதுவே தங்கள் வெற்றிமணி என்று சித்தரஞ்சனி நினைத்தாள். பூரித்தாள்.

(தொடரும்)





# வெற்றிக்கு ஒரு வழி



வாசகர் பக்கம்

**சிறுகச் சேர்த்தால்.....**

திருமணமான புதிதில் என் கணவர் ஆயிரம் ரூபாய் சம்பளம்வாங்கிக்கொண்டிருந்தார். ஆனால் பெரும் ஊதாரி. எங்கள் உறவினர்கள் எல்லோரும் சொந்த வீட்டுடன் வசதியாக இருந்தார்கள். எனக்கும் எப்படியாவது சொந்த வீடு கட்டிவிட வேண்டும் என்று ஆசை. வலுக்கட்டாயமாக மாதம் ரூ 250 சேமித்து ஆர்.டி. கட்ட ஆரம்பித்தேன். பத்து வருடங்கள் இப்படிச் சேர்த்ததில் வட்டியுடன் சேர்த்து 52,000 ரூபாய் கிடைத்தது. அத்துடன் ஆபீஸில் கிடைத்த கடனையும் என் நகைகள் சிலவற்றை விற்றுப் பெற்ற பணத்தையும் சேர்த்து ஒன்றரை லட்ச ரூபாயில் அழகான வீடு கட்டினோம். இன்று எங்கள் வீட்டின் மதிப்பு மூன்று லட்சம் ரூபாய்கள்!

— ஆனந்தா வரதராஜன், சிதம்பரம்.

**மின்னல் போல் ஒரு யோசனை**

பெங்களூர் செல்ல இருந்த எங்கள் குடும்ப நண்பர் தம் திட்டத்தில் திடீர் மாற்றம் செய்ததால், அவர் மூலமாக பெங்களூரில் வசித்த மகளுக்குக் கொடுத்து அனுப்ப வாங்கி வைத்திருந்த ஏராளமான கொப்பரைகள் எங்களிடம் தேங்கிப் போயின. அவ்வளவையும் வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று யோசித்தேன். மின்னல் போல் ஒரு யோசனை தோன்ற எல்லாக் கொப்பரையையும் சீவி, தேவையான அளவு உப்பு, காரம் சேர்த்து வறுத்து, 'மிக்ஸியில்' பொடி செய்து வாங்கினேன். அளவான பாக்கெட்டுகளில் அவற்றை நிரப்பி 'சட்னி பவுடர்' என்று நாமகரணம் செய்து, கிடைத்த விலைக்கு விற்றுத் தரச் சொல்லிக் கடையில் கொண்டு போய்க் கொடுத்தேன். அத்தனையும் அமோக

மாக விற்றுப் போயிற்று. மறுபடியும் தயார் பண்ணிக் கொடுங்கள் என்று கடைக்காரர் கேட்க, இப்போது பகுதிநேர பிஸினஸாகவே அதைச் செய்து வருகிறேன்.

—பி. எஸ். சரஸ்வதி, பழநி.

### துணிவே துணை!

ப்ளஸ் டூ' படித்துக் கொண்டிருந்த என் பெண் மருத்துவக் கல்லூரியில் இடம் பிடிக்கும் நோக்கத்துடன் மிகக் கவனமாகப் படித்து வந்தாள். திடீரென்று பள்ளிக்குப் போவதையே வெறுக்க ஆரம்பித்து, வீட்டில் உட்கார்ந்து அழத் தொடங்கினாள். அவளுடைய இந்த நடத்தைக்குக் காரணம் ஓர் இளைஞன் என்று கண்டு பிடித்தேன். கல்லூரி மாணவனான அவன் இரண்டு மாதங்களாக அவளைப் பின் தொடர்ந்து வம்பு செய்து வருவதாக அறிந்து, அவனை எப்படிக் கண்டிப்பது என்று யோசிக்கலானேன். ஒருநாள் அவனை அழைத்து, "உடனே என் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள். எனக்கு எந்த விதமான ஆட்சேபணையும் இல்லை" என்றேன். அன்று போனவன் பிறகு திரும்ப வேயில்லை! என் பெண் நிம்மதியாகப் படிப்பைத் தொடர்ந்தாள்.

— வே. சந்துரு, மயிலாடுதுறை.

### நாணயம் விளைவிக்கும் நம்பிக்கை

புதிதாக ஜவுளிக் கடை ஆரம்பித்தார் என் நண்பர். மற்ற ஜவுளிக் கடைக்காரர்கள் ஆளுக்கும், சந்தர்ப்பத்துக்கும் தக்கபடி விலையைக் கூட்டியும் தரத்தைக் குறைத்தும் விற்று, ஏகமாக லாபம் ஈட்டியபோது, நண்பர் நாணயத்தை விடாமல் கடைப்பிடித்து நஷ்டமே அடைந்தார். ஆனால் அவர் சிறிதும் மனம் தளரவில்லை. நாளாவட்டத்தில் அவர் கடையில் எப்போதும் தரமான சரக்கு நியாயமான விலைக்குக் கிடைக்கும் என்ற உண்மை வெளிச்சமாகி அவருக்கு நிறைய லாபமும் கிடைக்க ஆரம்பித்தது. அதோடு சிறு பிள்ளைகள்கூட அவர் கடைக்குத் தனியே போய்த் துணி வாங்கலாம் என்ற நற்பெயரும் நன்னம்பிக்கையும் ஏற்படுத்திக் கொண்டார்.

— ஆர். முருகேஸ்வரன், சிவகாசி.

### நன்னடத்தை அவசியம்

திறமைசாலியான எனது நண்பரின் குடிப் பழக்கம் அவருடைய அலுவலகப் பதவி உயர்வுக்குப் பெரிய தடையாக இருந்து வந்தது. பலமுறை, பலவிதமாக எடுத்துச் சொல்லியும் அவரால் அப்பழக்கத்தை விட முடியவில்லை. கடைசி முயற்சியாக அவர் போதையில் இருக்கையில் பேசியதைக் காஸெட்டில் பதிவு செய்து, அவரையே கேட்கச் செய்தோம். அன்றே அவர் மது அருந்துவதைக் கைவிட்டார். இன்றைக்கு அவர் பலருடைய பதவி உயர்வை நிர்ணயிக்கும் அதிகாரி.

— எஸ். சங்கரசுப்பு, திருச்செந்தூர்.

### கருத்தூன்றிச் செய்தால் கவலையில்லை!

தனியார் அலுவலகத்தில் டைப்பிஸ்ட்டாக வேலைக்குச் சேர்ந்த புதிதில் வேலையில் நிறைய தவறுகள் செய்து அடிக்கடி திட்டுகள் பெற்று வந்தேன். அப்போது ஒருமுறை சுவாமி சின்மயானந்தாவின் சொற்பொழிவைக் கேட்கும் வாய்ப்புக் கிட்டியது. 'கருமமே கண்ணாக இரு' என்று அவர் கூறிய உபதேசம் என்னை மிகவும் கவர்ந்தது. காரியத்திலிருந்து கவனம் திசை திரும்புவதால் தான் தவறுகள் ஏற்படுகின்றன என்று புரிந்து கொண்டேன். கவனத்தைச் சீர்படுத்தத் தினமும் ஐந்து நிமிடம் மனப்பயிற்சி செய்யலானேன். இப்போது என் வேலையில் தவறுகள் குறைவு; என் மனத்திலும் அதிகாரிகளின் மனத்திலும் நிறைவு.

— ஆர். கணேசன், சேலம்—7.

### சந்தர்ப்பம் விடுத்த சவால்!

தெரிந்த காண்ட்ராக்டராக இருந்தபோதும் வீடு கட்டும் விஷயத்தில் எங்களை நிறைய ஏமாற்றிவிட்டார். கலப்பட சிமெண்டை உபயோகித்ததற்காக அவரைத் தட்டிக் கேட்டபோது வேலையைப் பாதியிலேயே விட்டுவிட்டுப் போய்விட்டார். வேறு காண்ட்ராக்டரையும் வேலையைப் பூர்த்தி செய்ய அனுமதிக்காமல் தடுத்துக் கொண்டிருந்தார். இந்த நிலையில் என் தம்பி தான் என்ஜினியரிங் படித்துவிட்டு வீட்டைக் கட்டி முடிப்பதாகச் சொன்னான். எளிதாகக் கிடைத்த மருத்துவக் கல்லூரி இடத்தை விட்டுக் கொடுத்து, படாத பாடுபட்டு சிவில் என்ஜினியரிங்கில் சேர்ந்து படித்து, ஐந்து வருடங்கள் கழித்து அந்தச் சவாலை அவன் நிறைவேற்றியபோது என் தந்தை அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை.

— நீரஜா மூர்த்தி, பெங்களூர்—19.

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

வே. சந்துரு,
சி—19, காவேரி நகர்,
மயிலாடுதுறை—609 003.





எதிர்த்தவரின் பாராட்டு!

# வெள்ளையனே வெளியேறு

தாம் சரியானது என உறுதியாக நம்பும் ஒரு 'கொள்கை தோல்வியைத்' தழுவுகிறது என்று தோன்றினால் அதைக் கைவிட்டு விடுகிறவர் அல்ல ஸி. ஆர். அதனை முன்னி லும் தீவிரமாகக் காதலிப்பார்! இப்போதும் பாகிஸ்தான் விவகாரத்தை விட்டுவிடாமல் அப்பிரச்னையைப் பொது மக்கள் முன் சமர்ப் பித்தார். முஸ்லீம்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கிற உரிமை முஸ்லீம்களுக்கே உண்டு என்பதை ஒப்புக் கொண்டு விடுங் கள். அந்தச் செயல், பிரிவினையைக் காட்டி லும் ஒற்றுமையையே தூண்டி விடும் என்றார்.

காங்கிரஸையே ஆதரித்த பெரும்பான்மை மக்களின் மனம் மாறவிட்டாலும் ஸி. ஆரின் மேடைப் பேச்சுக்களைக் கேட்கத் திரளாகக் கூட்டம் சேர்ந்தது. பலர் அவருடைய கருத்தை ஏற்றுக் கொள்ளவும் செய்தனர். பாகிஸ் தான் பிரிவினையை எதிர்த்த ஸ்ரீநிவாஸ சாஸ்திரி சேலத்தில் ஸி. ஆர். பேசுவதைக் கேட்டுவிட்டுத் தம் நண்பருக்கு எழுதினார்: ''ஸி. ஆருக்கு நேற்று ஒரு மாபெரும் வெற்றி கிடைத்தது. இருபதாயிரம் பேர் அடங்கிய கூட்டம் ஒன்றரை மணி நேரம் அவர் பேசியதை ஆடாமல் அசையாமல் அமைதியுடன் கேட்டது.... ராஜாஜிக்குப் பெரும் புகழும் கௌரவமும் இருப்பதை நாம் மறுக்க முடியாது. அவருடைய பேச்சு சக்தி வாய்ந்ததாகவும் அழுத்தமானதாகவும் புத்தி சாதுர்யத்துடனும் விளங்கியது.''

தஞ்சாவூரில் ஸி. ஆர். வரலாறு காணாத கூட்டத்தை ஈர்த்ததாக 'ஹிந்து' கூறியது. மதுரையில் அவர் பேசுவதைக் கேட்கக் கூடிய கூட்டம், அந்நகரில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டங்களில் ஒன்றாக அமைந்தது. அக்கூட்டத்தில் வன்முறைக்குத் துணிந்து கலகம் விளைவிக்கிற சில விஷமிகளும் இருந்த னர். ஸி. ஆர். அவர்களிடம் கூறியதை 'ஹிந்து' வெளியிட்டது:

''நான் உங்களைக் கண்டே பயந்துவிட் டால் ஜப்பானியர்கள் தாக்கும்போது அவர் களை எப்படிச் சந்திப்பேன்? யார் பயந்து ஓடிப் போனாலும் சரி, நான் ஓடிப் போக மாட்டேன். இக்கூட்டத்தைக் கலைக்க உங்களைப் போல் ஆயிரம் மடங்கினர் வந்தா லும் நான் இங்கு நின்று அவர்களைச் சந்திப் பேன்.''

ஹிந்து மேலும் கூறியது:

''கூட்டத்தின் முடிவில் ஆர்ப்பாட்டம் நடந்தது: பாகிஸ்தானுக்கு எதிராகக் கோஷங் களும் எழுந்தன. தொடர்ந்து ராஜாஜி மீது ஒரு கருங்கல் வீசப்பட்டது. 'என்னைத் தாக்க வேண்டுமா? வாருங்கள் — இங்கேதான் இருக்கிறேன்' என்றவாறே தம்மை எதிர்த்த ஆர்ப்பாட்டக்காரர்களின் கூட்டத்தினிடை யில் குதித்துவிட்டார் அவர்.''

ஏராளமான தென்னிந்தியர்களுக்கு ஆண் டாண்டு காலமாக 'ராஜாஜி' 'காங்கிரஸ்' என்ற இரண்டு பெயர்களும் ஒரு பொருளைத் தான் உணர்த்தி வந்தன. ஸி. ஆர். மஹாத்மா வின் பிரதிநிதியாகவே கருதப்பட்டார். ஸி. ஆரும் காந்தியும் கருத்து மாறுபட்டிருப் பதைக் கண்டும் ஸி. ஆர். காங்கிரஸின் கருத் துக்களைப் பேசவில்லை என்பதாகக் கேட்டறிந் தும் பலர் அதிர்ச்சியும் குழப்பமும் அடைந் தார்கள். முடிவில் தென்னகத்துக் காங்கிரஸ் காரர்களுள் பெரும்பான்மையினர் ராஜாஜிக்கு மதிப்பு அளித்த போதிலும் அவருக்குக் கீழ்ப் பணிய மறுத்துவிட்டனர். மஹாத்மா வகுத்த பாதையிலிருந்து சென்னை மாகாண மக்களைத் திசைத் திருப்பிவிடலாம் என்று ஸி. ஆர். எண்ணியது தவறாயிற்று.

மஹாத்மாவுக்கு இப்போது ஒரே ஒரு தீர்வுதான் தென்பட்டது. அது பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெறியேற வேண்டும் என்ற இறுதி முடிவு. ''அவர்கள் ஓர் ஒழுங் கான முறையில் பின்வாங்கினால் இந்தியர்

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — 11
ராஜ்மோகன் காந்தி

கள் அவர்களிடம் கொண்டிருக்கும் வெறுப்பு அன்பாக மாறிவிடும்'' என்றார் அவர். இதன் விளைவாக, பிரிட்டிஷாரை இந்தியாவிலிருந்து வெளியேறுமாறு காங்கிரஸ் கேட்க வேண்டும் என்றும் அவர்கள் மறுத்தால் மக்கள் இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. இந்த எண்ணமே மெய்ச்சிலிர்ப்பை எல்லாரிடத்திலும் ஏற்படுத்தியது.

'லீகுடன் இணைந்தால், பிரிட்டிஷார் நமக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாவார்கள்' என்றார் ஸி.ஆர். ''காங்கிரஸுக்கும் லீகுக்கும் இடையே ஒரு செயற்கைப் பிளவை உண்டாக்கி அந்தப் பிளவை நிரந்தரமாக்கியும் வரும் பிரிட்டனை வெளியேறச் சொல்லிக் கட்டாயப்படுத்தினால் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் வேற்றுமைகளை மறந்து ஒற்றுமையாக இருப்பார்கள்'' என்றார் காந்தி. ஸி.ஆர்.—காந்தி இருவர் கருத்துக்களுக்கும் இடையே மலைக்கும் மடுவுக்குமான வேறுபாடு இருந்தாலும் ஒருவர் மற்றவருடைய கருத்தை மாற்ற முயற்சி செய்தனர். பலமுறை இருவரும் கலந்து பேசினார்கள்; பத்திரிகைகள் மூலம் விவாதம் நடத்தினார்கள். ''காங்கிரஸின் ஒரு கோஷத்துக்குப் பணிந்து பிரிட்டன் இந்த நாட்டைவிட்டு வெளியேறிவிடும் என்று எதிர்பார்ப்பதும் ஆசைப்படுவதும் யதார்த்தமானதல்ல'' என்று கூறிய ஸி.ஆர். மேலும் தொடர்ந்தார்: ''பிரிட்டன் வெளியேறாது. வெளியேறவும் கூடாது. அன்னிய தேசத்தின் (ஜப்பான்) பேராசை மிகுந்த தாக்குதலுக்கு இந்தியா இலக்காகக் கூடிய குழப்பம் நிறைந்த இந்தச் சூழலில், பிரிட்டன் இந்நாட்டை விட்டு அகன்று' விடும் தவறைச் செய்யக்கூடாது. அப்படிச் செய்வது இதுவரை பிரிட்டன் செய்து வந்துள்ள குற்றங்களுக்கெல்லாம் சிகரமான குற்றமாகி விடும்.''

''வெள்ளையர் வெளியேறுவதால் ஜப்பானியப் படையினருக்கு இந்தியாவை ஆக்கிரமிக்க வெற்றிலை பாக்கு வைத்து அழைத்ததாகிவிடாது'' என்று காந்தி வாதாடினார். ''அப்படியே ஜப்பானியர் தாக்கினாலும், எனது கொள்கையில் நம்பிக்கை உள்ளவர்களும் நானும் அத்தாக்குதலை அஹிம்சை முறையில் எதிர்ப்போம். ஏனையவர்கள் போர்க் கருவிகள் கொண்டு எதிர்ப்பார்கள். இந்தியா நேச நாடுகளுடன் சேர்ந்துவிடும். நேச நாடுகளின் படைகள் இந்தியாவில் தங்கி ஜப்பானை எதிர்க்க அனுமதி வழங்கப்படும்.'' (மஹாத்மா காட்டிய குறிப்பிடத்தக்க பெரிய சலுகை இது.)

இந்தக் கருத்தை எதிர்த்து வாதாடிய ஸி.ஆர். ''ஒரு வலுவான மாற்று அரசை உருவாக்காமல் ஏற்கெனவே உள்ள அரசு வெளியேறுவதால் நிர்வாகம் நிலைகுலைந்து போகும். சமூக அமைப்பே ஆட்டம் கண்டு விடும்'' என்று கூறினார். ஆனால் மஹாத்மாவோ, வெள்ளையனே வெளியேறு இயக்கம் இதற்கு நேர் மாறான விளைவுகளையே ஏற்படுத்தும் என்று வாதாடினார். ''இன்று ஜப்பான் மூலம் இந்தியாவுக்கு விமோசனம் கிடைக்கலாம் என்று நம்மில் பலர் எண்ணுகின்றனர். அவர்கள் கவனம் முழுவதுமாகத் திசை திருப்பப்படும். இந்தியர்கள் ஒரே மனத்தினராய் விளங்குவார்கள்'' என்றார். ஸி. ஆரோ காங்கிரஸ் — லீக் உடன்பாடே பிரச்னையைத் தீர்க்கக் கூடிய தங்கத் திறவு கோல் என்று கருதினார். 'ஆனால் கடந்த காலத்தில் ஸி. ஆர். பிரிவினையை எதிர்த்தவராயிற்றே?' ஆம், எதிர்த்தவர் தான். ஆனால் அப்படி அவர் எதிர்த்தபோது 'பிரிவினை' சிலர் மனங்களில் வெறும் அபிப்பிராயமாக மட்டுமே நிலவி வந்தது. இப்போதோ அந்த அபிப்ராயம் வலுவடைந்து, கோடிக்கணக்கான முஸ்லீம் மக்களின் மனங்களில் மாற்ற முடியாத ஓர் உணர்வாக உறைந்து போயிருந்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: சீதா ரவி

அடுத்த இதழில்

# தில்லுமுல்லு தெரிந்தால் தக்கார் பதவி!

* உங்களுக்குக் கோயில் செலவில் சிங்கப்பூர் பயணம் மேற்கொள்ளத் தெரியுமா? தெரியாது? அப்படியானால் நீங்கள் கோயிலில் தக்கார் பதவிக்கு ஏற்றவரல்ல!

# BHARAT ACADEMY OF PARAMEDICAL STUDIES

(Regn. No. 222/86)

Offers 1 Year Diploma Course In

## MEDICAL LABORATORY TECHNOLOGY

- Highly Job Oriented
- Lectures By Professionals
- Individual Attention Assured In Practical Sessions
- Technical Guidance Provided After The 1 Year Course
- Eligibility — Pass In + 2 Or Above With Science Subjects

For Prospectus And Application Form Write To:

**Project Co-Ordinator,** Office at,
No. 2, Bronson Garden Road,
Kellys, Kilpauk,
Madras-600 010.

அனைவரும் விரும்புவது...




# பெருங்காயம்

தயாரிப்பாளர்கள்:

**P.C. கம்பெனி, மதுரை-1**

கிளை: 9/10, ஆதியப்ப நாயக்கன் தெரு. சென்னை-1

# காற்றில் பறந்தது;

இருபதாண்டுகளுக்கு முன்பு, "நீங்கள் எனக்கு மூவாயிரம் ஏக்கர் நிலம் தாருங்கள். இந்த மஞ்சளாற்றின் குறுக்கே அணையைக் கட்டி, உங்களுக்கு 2,100 ஏக்கர் நிலத்தை நன்செய் நிலங்களாக மாற்றித் தருகிறேன்'' என்றார் காமராஜர்.

தேவதானப்பட்டி, வாழைப்பட்டி, எருமைநாயக்கன் பட்டி, அட்டணம் பட்டி, புள்ளக்காபட்டி போன்ற பல கிராமங்களில் உள்ள விவசாயிகளுக்குத் தங்கள் நிலங்களை இழக்கிறோம் என்ற கவலை ஒருபுறம் இருந்தாலும் அணை கட்ட நிலம் கொடுத்தால் மிச்சம் மீதியுள்ள நிலத்திலாவது 'நன்செய்ப் பயிர்களை விளைவிக்கலாமே; என்ற நினைப்பில் சந்தோஷத்தோடு ஒத்துக் கொண்டார்கள்.

கொடைக்கானல் மலையிலிருந்து இறங்கி வரும் பல ஆறுகளில் இந்த மஞ்சளாறும் ஒன்று. அணை கட்டப்படுவதற்கு முன்பு வத்தலகுண்டு பகுதியை மட்டும் செழிப்பாக்கிக் கொண்டிருந்தது இந்த ஆறு.



மீராமொய்தீன்.



கண்ணுச்சாமி.



தோத்தப்பா.

பெரும்பகுதித் தண்ணீர் வீணாகப் போய்க் கொண்டிருந்தது. ஆகவேதான் வத்தலகுண்டுவிற்கு முன் தேவதானப்பட்டி அருகில் அணை ஒன்றைக் கட்டினால் என்ன என்ற எண்ணம் காமராஜருக்கு எழுந்தது..

இன்று கொடைக்கானல் மலையின் மடியில் குறுக்காகக் கட்டப்பட்டிருக்கும் இந்த அணையின் உயரம் ஐம்பத்தேழு அடி. ஆனால் கட்டத் திட்டமிடப்பட்டதோ எண்பத்தைந்து அடியாம்.

"ஏன் இப்படி இருபத்தெட்டு அடி உயரத்தைக் குறைத்துக் கட்டியிருக்கிறார்கள்?'' என்று கேட்டதற்கு, "எல்லாம் தனிப்பட்டவர்களின் சுயநலம்தான் ஸார்!'' என்று சொன்ன தேவதானப்பட்டியைச் சேர்ந்த மீரா மொய்தீன் கொஞ்சம் குரலைத் தாழ்த்திக் கொண்டு "85 அடி கட்டியிருந்தால் பங்களாவாசி ஒருவரது நிலங்கள் அணைத் தேக்கத்தில் மூழ்கியிருக்கும். அதனால் பொதுநலனுக்குக்கூட தன் நிலத்தை விட்டுக் கொடுக்க மறுத்துவிட்டார். அது காரணமாகத்தான் அணையின் உயரம் குறைக்கப்பட்டது'' என்றார்.



தேவதானப்பட்டிக்குச் செல்லும் வாய்க்கால் காய்ந்து கிடக்கும் காட்சி....

# காமராஜ் வாக்குறுதி!

அணையை உயரம் குறைத்துக் கட்டியது, தேவதானம்பட்டியைச் சேர்ந்த மக்களுக்குக் கிடைத்த முதல் அடி என்றால், அதன்பின் அரசு நிர்ணயித்த அளவின்படி அவர்களுக்குத் தண்ணீர் திறந்து விடாதது இரண்டாவது அடி!

ஒவ்வொரு வருடமும் அக்டோபர் மாதத்திலிருந்து மார்ச் மாதம்வரை தண்ணீர்விட வேண்டும். அணை கட்டப்படுவதற்கு முன்பே இந்த ஆற்றால் பயன் பெற்றுக் கொண்டிருந்த வத்தலகுண்டு பகுதிக்குக் 'கீழ் போகப் பாசனம்' என்ற பெயரில் அதிக அளவு தண்ணீர் தரப்பட்டது. புதிதாகப் பாசன வசதி பெறும் தேவதானப்பட்டிக்கும், அதனைச் சுற்றியுள்ள மற்றும் பல கிராமங்களுக்கும் கொஞ்சம் குறைவாகத்தான் கிடைக்கும் என்றுஏற்பாடு. தண்ணீர்விடப்படவேண்டிய ஐந்து மாதங்களில் முதல் இரண்டு மாதங்களுக்கு 40:60 என்ற விகிதத்திலும் அடுத்த இரண்டு மாதங்களுக்கு 30:45 என்ற விகிதத்திலும் கடைசி ஒரு மாதத்துக்கு 20:30 என்ற விகிதத்திலும் விடப்பட வேண்டும்.

ஆனால் இந்த விகிதப்படி தேவதானப்பட்டிப் பகுதிக்குத் தண்ணீர் திறந்துவிடப்படுகிறதா? இதுதான் கேள்வி. அணையின் உயரம் 57 அடி என்றால் 55 அடி உயரம் வரைதான் தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ள முடியும். தேவதானப்பட்டி விவசாயிகளுக்குத் தண்ணீர் செல்லும் மதகு 37 வது அடியில் உள்ளது. ஆக அணை நிறைந்திருந்தாலும்கூட பதினெட்டு அடி தண்ணீர் தான் கிடைக்கும். ஆனால் வத்தலகுண்டுப் பகுதி விவசாயிகளுக்கோ கீழ் போகப் பாசனம் என்று திறந்து விட்டுக் கொண்டே இருப்பார்கள். விகிதாச்சாரம் எல்லாம் என்னவாயிற்று என்கிறீர்களா? அட, அதை விடுங்கள் ஸார். எப்பவோ காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் காமராஜரால் உறுதிமொழி கொடுக்கப்பட்டதுதானே! அதை இன்னுமா ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்? போன தேர்தலில் கொடுத்த வாக்குறுதியே மறந்து போகும்போது எப்போதோ காமராஜர் கொடுத்த வாக்குறுதி எப்படி ஞாபகத்தில் இருக்கும்? என்கிற கதைதான்! அதனால் அணை கட்டுவதற்காக நிலத்தைக் கொடுத்த தேவதானப்பட்டியைச் சேர்ந்த விவசாயிகள் அவஸ்தைப் படுகிறார்கள்.

"எல்லாம் 1980 வரை சரியாகத்தான் இருந்தது (ஆச்சர்யமான விஷயம்தான்!) அதற்கு அப்புறம்தான் பிரச்னையே ஆரம்பமானது. அணையில் முழு அளவு நீர் மட்டம் இருந்தாலும், விகிதாச்சாரப்படி தண்ணீர் விடுவதில்லை. எங்களுக்கு முதல் இரண்டு மாதம் '40 சதவீதமும், வத்தலகுண்டு விவசாயிகளுக்கு 60 சதவீதமும் விட வேண்டும் என்றாலும் 80 க்குப் பிறகு எடுத்தவுடனேயே கீழ்ப் போகத்திற்குச் செல்லும் மதகுகள் எல்லாம் திறந்து விடப்பட்டு 20:80 என்ற விகிதத்தில் தண்ணீர் சென்று கொண்டிருக்கும். இதைக் கேட்கப் போனால், 'எல்லாம் சரியாகத்தான் விட்டுக் கொண்டிருக்கிறோம்' என்பார்கள். இந்த ஆண்டு அணை நிரம்பி வழிந்தது. ஆனால் எங்களுக்கு இரண்டு மாதங்கள் மட்டும்தான் பாசனத்திற்குத் தண்ணீர் திறந்துவிட்டார்கள். அதனால் இப்போது 1,500 ஏக்கர் நெற்பயிர் தண்ணீர் இன்றிக் காய்ந்து போய்விட்டது. அவரவருக்கும் ஏற்கெனவே கடன். இப்போது இருக்கும் கடனோடு மேலும் கடன் வாங்கிக் கிணறு தோண்டுவதில் இறங்கியிருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் ஒழுங்கான விகிதத்தில் தண்ணீர் திறந்து விடாததுதான்" என்றார் மீரா மொய்தீன்.

"1979ல் 44 அடி மட்டம் நீர் இருந்தபோதே ஒப்புக் கொண்ட விகிதாச்சாரத்தில்



• மஞ்சள் ஆறு அணை.

தண்ணீர் விடப்பட்டிருக்கும்போது 1985ல் அதிகபட்ச அளவான ஐம்பத்தைந்து அடி தண்ணீர் இருந்திருந்தும்கூட ஏன் விட முடிய வில்லே?" இந்தக் கேள்வியை இன்னொரு விவசாயியான கண்ணுசாமியிடம் கேட்டோம்.

"எல்லாம் பணம் ஸார்! பணம்! வத்தல குண்டு விவசாயிகள் வளமானவர்கள். இந்த மஞ்சளாறு அணை தொடர்பான பொறி யாளர் அலுவலகம் அங்குதான் இருந்தது. கொடுக்க வேண்டியதைக் கொடுத்துப் பெற வேண்டியதைப் பெற்றுக் கொண்டார்கள், அந்த வளமான விவசாயிகள்!" என்ருர் அவர்.

வத்தலகுண்டு, இப்போது புதிதாகப் பிரிக்கப்பட்ட அண்ணு மாவட்டத்தில் சேர்ந்த பிறகு அந்த அலுவலகம் தற்போது பெரியகுளத்தில் இருக்கிறது. ஏன் அணை யுள்ள இடத்திலேயே அலுவலகம் இயங்க வில்லே? அணைப் பகுதியில் அதிகாரிகளுக் கென்று குடியிருப்பு வசதிகள் இருந்தும்கூட அவர்கள் தங்கள் வசதிக்காக நகர்ப்புறத்தி லேயே குடியிருக்கிருர்கள். அதனுல்தான் எங்கள் பிரச்னேகளே உடனுக்குடன் தெரிவிக்க முடியவில்லே" என்ருர் தொத்தப்பா என்ற விவசாயி.

உண்மைதான். நாங்கள் சென்று பார்த்த போது அணையின் பக்கத்தில் கட்டப்பட் டிருந்த குடியிருப்புகள் காலியாகத்தான் இருந்தன. சிலவற்றில் தற்காலிகமாக இலங்கை அகதிகளேக் குடி வைத்திருக்கிருர் கள். இப்போது தண்ணீர் மட்டம் முப்பத்தேழு அடிக்கும் குறைவாகப் போய்விட்டதால், இப்போது தண்ணீர் இருக்கும் இடத்திலிருந்து தேவதானப்பட்டி விவசாயிகளுக்குத் தண் ணீர் செல்லும் மதகுக்குக் கால்வாய் ஒன்று வெட்டப்பட்டிருந்தாலும் அதில் தண்ணீர் வரவில்லே. காய்ந்துதான் கிடக்கிறது.

இப்போதுள்ள அஸ்திவாரத்திலேயே அணையை இன்னும் பதினெரு அடி உயரத் துக்கு உயர்த்திக் கட்டலாம் என்று நிபுணர் கள் சொல்கிருர்களாம். "ஆனல் எவ்வளவு உயரம் கட்டித்தான் என்ன பிரயோஜனம்? விகிதாச்சாரப்படி தண்ணீர் விடப்படவில்லே யென்ருல், நாங்கள் விவசாயத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு வேறு ஏதாவது தொழில் செய்ய வேண்டியதுதான்" என்கிருர்கள் அந்தப் பகுதியிலுள்ள அத்தனே விவசாயி களும்.

ஏற்கெனவே ஆயிரத்து ஐந்நூறு ஏக்கர் பயிரைக் காவு கொடுத்துவிட்டுத் தவித்துக் கொண்டிருக்கும் அந்த விவசாயிகளிடம் கடந்த பிப்ரவரி முதல் நில வரி வசூலிக்கவும் ஆரம்பித்திருக்கிறதாம் அரசு. 'எரிகிற வீட்டில் பிடுங்கியவரை ஆதாயம்' என்பதுபோல் அரசு நடந்து கொள்ளலாமா? என்று இந்த விவசாயிகள் வேதனேப்படுவதைக் கேட்க நமக்கும் 'ச்சே என்ன அரசு இது' என்றுதான் மனக் கசப்பு ஏற்படுகிறது.

— தில்லப்பா

படங்கள்: மணி

'அத்திப்பட்டி' என்று ஊர்ப் பெயர் தான் இல்லை. 'த. த.'வில் வருகிற மாதிரி வசனங்கள்தான் பேசப்படவில்லை. மற்றபடி அதே பிரச்னை. அதேமாதிரி அவஸ்தைப்படும் ஜனங்கள்.

இப்படி நாம் சந்திக்க நேர்ந்தது உசிலம பட்டியிலிருந்து பத்து கி. மீ. தள்ளி உள்ள நல்லபெருமான்பட்டியில். கல்லும் சரளையு மாக — சிக்கலான ரோட்டில் — பஸ் வசதி யில்லை. சைக்கிள்தான். நாமும் போனோம்.

மழை ஒரு வருஷமாக இல்லை. கிராமமே களையிழந்து போய்விட்டது. கிராமத்துக்கே உரித்தான பச்சை கண்ணில் படவில்லை. வயல்கள் காய்ந்திருக்கின்றன. ஊர் மையத் தில், சாவடியோரம் இருக்கிற கிணறு முழுக்க வறண்டு போய் விட்டது. நாம் போனதும் — வருத்தமான முகங்களுடன் கூட்டிக் கொண்டு போய்க் கிணற்றைக் காட்டினார் கள் ஊர்ப் பெண்களும், ஆண்களும். 25 அடி ஆழமுள்ள கிணறு தூர்ந்து கிடக்கிறது. எங்கும் அடி பைப்புமில்லை.

''பத்து மாசத்துக்கு மேலே ஆகுதுங்க. தண்ணிப் பிரச்னைக்கு மனுஷங்க இப்படிச் சாகிறோம். ஏதோ... வறண்டு போன காட் டிலே கிடக்கிற மாதிரி கிடக்கிறோம். மாடு, கன்றுகளுக்குக் கூடத் தண்ணியில்லாம — அப் படியொரு தவிப்புத் தவிக்கப் போயிரு துங்க'' என்றார். சண்முகம்(!) என்கிற கிரா மத்துப் பெண்.

நாம் போன கொஞ்ச நேரத்தில் பெரிய கும்பலே நம்மைச் சுற்றி நின்று புலம்ப ஆரம் பித்தது. ''2 மைலுக்கு மேலே போய்த் தண்ணி எடுத்துட்டு வர்றதுக்குள்ளே குறுக்கு ஒடிஞ்சு போயிருது. கிணறுகள்லே அப்படி இறங்கித் தண்ணி எடுக்குறப்ப ஊர்க்காரி ஒருத்தி விழுந்து நல்ல அடிபட்டுப் போச்சு. தோட்டத்துக்குப் பாயற கிணறுகள்லே போய் எடுக்கறதுனாலே கிணற்றைச் சுத்தி முள் அடைச்சுப் போட்டுடறாங்க... சாமீ... என்ன செய்யறது நாங்க...? பொண்டு பிள்ளைகளா... தண்ணிக்கு இந்தத் தவிப்பு தவிக்க வேண்டி யிருக்கு...'' என்று குரலில் படபடப்புடன் சொல்லி முடிக்கு முன்பு தவித்துப் போனார் கருப்பாயி அம்மாள்.

ஊருக்குப் பக்கத்தில்தான் வைகையாறு ஓடுகிறது. அதன் பிரிவாக ஒரு 'வாய்க்கால்' ஊருக்குள் வந்தும் தண்ணீரில்லை. ''இந்தப் பக்கத்திலேயே 'அடி பம்ப்' கூட இல்லாம கஷ்டப்படுறவங்க நாங்களாகத்தான் இருப் போம்'' என்றார்கள் பலரும்.

சுற்றிலும் நம்மை நெருக்கியடித்துக் கொண்டுசட்டைபோட்டும்,போடாததுமாய் சிறு பிள்ளைகள் கூட்டம். ''ஏன் ஸ்கூலுக்குப் போகலையா?'' என்று கேட்டதுமே பக்கத்திலிருந்தவர்கள் சொன்னார்கள்:

''இப்படி எழுபத்தைஞ்சு பிள்ளைகளுக்கு மேலே இருக்குங்க. ஆனா ஊர்லே பள்ளிக் கூடமில்லை. ஒரு பால்வாடி கூடக் கிடைக் யாது. ஒரு கி. மீ. தூரத்திலே இருக்கிற ஸ்கூலுக்குத்தான் பிள்ளைகள் போகணும். போற போதே ஒரு ஆற்றைக் கடந்து போறப்ப — சில பிள்ளைகள் விழுந்துர்றதி னாலே அநேகம்பேர் ஸ்கூலுக்கு அனுப்புற தில்லை.''

''ஏன் இந்தப் பிள்ளைகளுக்கெல்லாம் சத்துணவு கிடைக்கிறதில்லையா?'' கேட் டோம்.

''சத்துணவு போடுற[illegible]லேங்க. பல சம யங்கள்லே அடிச்சு வி[illegible]டறாங்க. எங்க குழந்தைங்களுக்குத் தனியா சத்துணவு போடுங்களேன்னு கேட்டோம். 'இங்கேயே வந்து சாப்பாடு கொடுக்கச் சொல்றோம்'னு யூனியன்லே சொன்னாங்க. ஆனால் இதுவரை யாரும் கொடுக்கலே. ஏதோ சத்துணவுக் கூடம் கட்டுறோம்னு சொல்லி அளந்தாங்க.

# இன்னும் ஒரு 'அத்திப்பட்டி'



● நல்லபெருமான்பட்டி.



● வெகுதூரத்திலிருந்து குடிநீர் கொண்டுவரும் பெண்கள்.



நல்லபெருமாள்பட்டி: 'வறண்டு போன தண்ணீர்த் தொட்டியும் ஆழ்குழாயும்...'

என்ன ஆச்சுன்னு தெரியலே. ஏங்க... எம். ஜி. ஆருக்குத் தெரிஞ்சா, உடனே சத்துணவு போட ஏதாவது செய்வாரில்லே?'' என்று அவர்கள் கேள்வி கேட்க நாம் வெறுமனே மௌனம் சாதிக்க வேண்டியதாயிற்று.

கொஞ்ச நேரத்தில் எல்லோருமே பல பிரச்னைகளைச் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். ஊரிலிருந்து தள்ளி இருக்கிறது சுடுகாடு. சுடுகாட்டிற்கான பாதை எதுவும் இல்லை."பாதை எதுவும் இல்லாததால் வயல் வரப்புகளில் பிணத்தைக் கொண்டுகிட்டு நடக்கிறது எவ்வளவு கஷ்டம் தெரியுங்களா? போய் எரிக்கிறதுக்கும் இடமில்லே. இருந்த இடத்தையும் பக்கத்து ஊர்க்காரங்க ஆக்கிரமிச்சுட்டாங்க. ஒண்ணும் செய்ய முடியலே" என்றார்கள் ஆதங்கத்தோடு.

கிராமத்திலேயே 'சுகாதார நிலையம்' இருக்கிறது. சமயங்களில் பிரசவத்திற்காக நிலையத்தை இவர்கள் அணுகியபோது, ஒரு பதிலும் இல்லை. ''இதுவரை இந்த ஊரைப் பொறுத்தவரைக்கும் ஒரு பிரசவமும் சுகாதார நிலையத்திலே நடக்கலே. மருந்து, மாத்திரையும் இல்லே. கேட்டால் குடும்பக்கட்டுப்பாட்டுக்காகத்தான் நிலையம் வைச்சிருக்கோம்கிறாங்க. அப்புறம் ஏன் சுகாதார நிலையம்னு போர்டு வைச்சிருக்காங்க...'' என்றார் ஓரளவு படித்தவரான ஆர். பால்சாமி.

''ஏதோ அரிசியைக் கொஞ்சங்கொஞ்சமா செலவழிக்கிற மாதிரி தண்ணியைச் செலவழிக்கிறோம். தண்ணிக்கும் கஷ்டம், பிணத்தைக் கொண்டு போகக்கூட கஷ்டம்...'' என்று நொந்து போய்ச் சொன்னார் இளைஞரான வீமராஜ்.

இவ்வளவெல்லாம் பிரச்னைகள் இருக்கிறபோது, சமீபத்திய பஞ்சாயத்துத் தேர்தலில் ஒரு சுவாரஸ்யம். ஐந்து கிராமங்கள் சேர்ந்த பஞ்சாயத்தில் 'பிரசிடெண்ட்' ஆக ஆசைப்பட்ட ஒச்சப்பட்டி சர்க்கரைத் தேவருக்குத் தன்னை எதிர்த்து யாரும் நின்று செலவழிக்கிறதிலெல்லாம் இஷ்டமில்லே. ஐந்து கிராம ஆட்களையும் கூப்பிட்டுப் பேசினார். ஐந்து ஊருக்கும் நடுவில் பிரும்மாண்டமாக நிற்கிறதிடியன் மலையில்தான் இவர்களது குல தெய்வமான ராமர் இருக்கிறார். ராமாயண ராமர்தான். ''மலைக்கு மின்சார வசதியும், மலையில் ஒரு சங்கு வசதியும் பண்ணித் தருவதாகச் சொல்லி, 25 ஆயிரம் ரூபாய் கொடுக்க — சர்க்கரைத் தேவரை யாரும் எதிர்க்கவில்லை. 'அன்ன போஸ்ட்' பிரசிடெண்ட் ஆகிவிட்டார்.

''ஏன்... உங்க ஊர்ப் பிரச்னையைச் சொல்லியிருக்க வேண்டியதுதானே?'' என்றதும், ''அஞ்சு ஊரும் சேர்ந்து முடிவு பண்ணினது. அதுவும் தெய்வ காரியம் வேறே. நாங்க கேட்க முடியுமா? இனிமேல்தான் ஏதாவது செய்வார்னு நினைக்கிறோம்'' என்கிறார்கள் நல்லபெருமாள்பட்டிக்காரர்களான "370" ஓட்டுக் காரர்கள்.

ஈச்சம்பட்டி, பக்கத்திலேயே இருக்கிற இன்னொரு கிராமம். இங்கும் தண்ணீர்ப் பிரச்னை. வேறோர் கிராமமான அம்பட்டையம்பட்டியிலும் இதே கதை. 2000 பேர் வசிக்கிற சற்றுப் பெரிய ஊர்!

எல்லோருக்கும் தண்ணீர்ப் பிரச்னை. வயல்களில் விவசாயமுமில்லே. குடிக்கத் தண்ணீருமில்லே. பக்கத்துக் கிராமத்துக்காரர்களெல்லாம் இரண்டு பக்கத்து ஊரான — செல்லம்பட்டியில் கூடிப் போராட, துப்பாக்கிசூடு வரை நடந்து, சில கிராம உடம்புகளில் துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்துவிட்டன. குண்டடிபட்டவர்கள் இன்னும் சிகிச்சையில் இருப்பதாகச் சொன்னார்கள். பல போலீஸ் காரர்களை இறக்கி, 'ஆர்டர்' கொடுத்து, துப்பாக்கி சூடு நடத்தி 'ஆஸ்பத்திரி' வரை செலவாகிற பணத்தில் ஓரிரு கிராமங்களில் அடி பம்ப் போட்டுக் கொடுத்திருக்கலாம். கிராமத்து வயிறுகள் குளிர்ந்து போயிருக்கும்.

—யூஜி

படங்கள்: யெம்யெம். ஐ.

**என்னென்ன செய்தால் மதுரை மாவட்டம் வளர்ச்சி பெறும்? — நெடுமாறன் கூறும் கருத்துக்கள் அடுத்த இதழில்.....**



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542—ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் கும்பகோணம் "ராஜா வேத காவ்ய பாடசாலை"யை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/—மூலதனம் ஏற்படுத்தியோ (அ) அவ்வப்போது ரூ. 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் சமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80—G விதியின்படி வருமானவரி விலக்கு உண்டு.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,
D-76, 3வது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம்—612 001.



• என். நீலகண்டன்



• இந்த வீடு மட்டும் எப்படிக் கட்டப்பட்டது?



• ஆர். தனபாலன்.

# "பணத்தைக் கொடுத்துவிட்டுப் பரிதவிக்கிறோம்!"

**ம**துரை — விருதுநகர் சாலையைத் தொட்டு திருமங்கலம் என்ற ஊரில் ஆறு ஏக்கர் நிலப் பரப்பை, வீடு கட்டுவதற்கு என்று ஒதுக்கி, ஒவ்வொருவருக்கும் விலை பேசி விற்ற பிறகு, தற்போது அதில் வீடு கட்ட அனுமதி மறுக்கப்படுவதோடு, அது 'ஹெவி இண்டஸ்ட்டிரியல் ஏரியா' என்றும் அறிவிக்கப்பட்டதால், வீடு கட்ட நிலம் வாங்கியவர்கள் தவிக்கின்றனர். பாதிக்கப்பட்டவர்களில் ஒருவரான ஆர். தனபாலன் என்பவரைச் சந்தித்தோம்.

"மதுரையிலும் விருதுநகரிலும் பணி புரிபவர்கள், நகரத்து நெருக்கடியிலிருந்து விடுபட்டுக் கொள்வதற்காக, திருமங்கலத்தைத் தங்களுடைய தங்கும் ஊராகத் தேர்ந்தெடுக்கிறார்கள். இதன் காரணமாக, இங்கு வாடகை வீடுகள் கிடைப்பது அரிதாகிவிட்டது.

"இந்தத் தேவையைச் சமாளிக்கும் வகையில் ஆறு ஏக்கர் குடியிருப்புக்கென ஒதுக்கப்பட்டது! 110 வீடுகள் கட்டுவதற்கு Blueprintம் தயாரித்துத் தனித் தனியாக விற்றார்கள். நானும் அதில் ஏழு செண்ட் நிலத்தை செண்டுக்கு ரூ 1000 கொடுத்து, 1979ல் வாங்கினேன். மற்ற இடங்களையும் எல்லோரும் அவரவர் தேவைக்கு ஏற்ப வாங்கிவிட்டார்கள். ஆனால், பிறகு வீடு கட்ட, அனுமதி வாங்கப் போகும்போது இது 'ஹெவி இண்டஸ்ட்ரியல் ஏரியா'வாக ஒதுக்கப்பட்டுவிட்டது. இதில் வீடு கட்ட அனுமதி தர முடியாது! என்று மறுத்துவிட்டார்கள்!

"முனிசிபல் அலுவலகத்தில் போய்க் கேட்டால், 'ஹெல்த் மினிஸ்டர், இண்டஸ்ட்டிரியல் மினிஸ்டர்' என்று ஒவ்வொருவரையாகப் பார்க்கச் சொல்கிறார்கள். எங்கள் பணத்தையும் கொடுத்துவிட்டு, எத்தனை அமைச்சர்கள் பின்னால்தான் இதற்காக அலைய முடியும்?

"இவர்கள் இண்டஸ்ட்டிரியல் ஏரியா என்று குறிப்பிடும் இடம், அதற்குத் தகுந்த இடமே அல்ல. அந்நிலத்தடி தண்ணீர், கடின நீராகும். மேலும், மின்சார வசதி போன்றவையும் போதுமான அளவு இல்லை! இங்கு பெரும்பாலும் தீப்பெட்டித் தொழிற்சாலைகள்தான். அவையும் போதுமான அளவு உள்ளன, இந்நிலையில், வீட்டுக்கு ஒதுக்கப்பட்ட இடத்தை எப்படித்தான் இண்டஸ்ட்ரியல் ஏரியா என்று அறிவித்தார்களோ தெரியவில்லை!

"நான் கடந்த பத்து வருடங்களாக வாடகை வீட்டில் குடியிருக்கிறேன். இடம் வாங்கிய நேரத்தில், வீடு கட்டியிருந்தால் சுமார் 60,000 ரூபாயில் கட்டி முடித்திருப்பேன். இப்பொழுது, ஒன்றரை லட்சம் இருந்தால்கூட ஒரு சிறு வீட்டைக் கட்டி முடிக்க முடியுமா என்பது சந்தேகமாக இருக்கின்றது!" என்று சொன்ன அவர் 110 வீடுகளுக்கு என்று ஒதுக்கப்பட்ட நிலத்தின் Blue Print, தான் வாங்கிய இடத்திற்குரிய தாஸ்தாவேஜுகள், பத்திரங்களையெல்லாம் எங்களிடம் ஆதாரமாக எடுத்து காட்டினார்.

இந்தப் பிரச்னை பற்றி என். நீலகண்டன் என்பவர் பேசும்போது, "இதற்கு பக்கத்தில் இண்டஸ்ட்ரியல் ஏரியா என்று முன்பு அறி

விக்கப்பட்ட இடத்தைத் தற்போது பி.ஆர்.சி. தொழிலாளர்கள் காலனியாக மாற்றியிருக்கிறார்கள். இன்னொரு பகுதியில், மதுரை ஹோமியோபதி மருத்துவக் கல்லூரி கட்டுவதற்கு அனுமதித்திருக்கிறார்கள். இப்படி, இண்டஸ்ட்ரியல் ஏரியாவையே, மக்கள் வசதிக்காக மாற்றியிருக்கும்போது, முன் கூட்டியே மக்களுக்கு வீடு கட்ட ஒதுக்கிய இடத்தை இப்பொழுது தரமாட்டேன் என்று எப்படிச் சொல்லலாம்?'' என்று ஆவேசமாகக் குறிப்பிட்டார்.

இது பற்றித் திருமங்கலம் நகராட்சி அலுவலகத்திலுள்ள ஆணையாளரைச் சந்தித்துக் கேட்க முயற்சி செய்தபோது, பலனளிக்கவில்லை!

# கொள்ளை அடிக்கும் வீட்டு வசதி வாரியம்



• இன்னும் கட்டி முடிக்கப்படாத காலனி.

• ஜி. அருணகிரிநாதன்

மதுரை எல்லீஸ் நகரில் முழுப் பணத்தையும் கட்டி முடித்த சுமார் 180 பேர்களுக்கு இன்னும் வீட்டை ஒப்படைக்காமல், வீட்டு வசதி வாரியம் இழுத்தடிக்கின்றது! அவர்களில் ஒருவர் மதுரையிலுள்ள அழகப்பா நகரில் வாழ்ந்து வரும் ஜி. அருணகிரிநாதன். மதுரை வீட்டு வசதி வாரியத்திடம் ரூ 65,000 க்கு மேல் கொடுத்துவிட்டு, வீடும் கிடைக்காமல், பணமும் திருப்பிக் கிடைக்காமல் என்ன செய்வது என்று தெரியாமல் திணறுகிறார்.

அவரை நேரில் சந்தித்து, இது பற்றிக் கேட்டோம். வீட்டு வசதி வாரியத்திடம் தான் பட்ட அவஸ்தைகளை எங்களுக்கு அவர் விவரித்தார்:

''மதுரை வீட்டு வசதி வாரியம் ஜனவரி 85 ல் விளம்பரம் செய்திருந்ததைப் பார்த்து, நானும் மனு கொடுத்தேன். அதன்படி எனக்கு HIG IV என்ற பிரிவில் 551 என்ற எண்ணுள்ள (இரண்டாவது மாடியில்) வீடு ஒன்று 1985 ம் ஆண்டு பிப்ரவரி 4 ம் தேதியில் நடந்த பொதுக் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டு, பிப்ரவரி 15 ம் தேதி, அந்த ஒதுக்கீடு உறுதியானதற்கான கடிதமும் அனுப்பியிருந்தார்கள். அதில், முழுத் தொகையான ரூ 65,000 மும் கட்ட வேண்டும் என்றும் மூன்று மாத கால தாமதமானால் பதின்மூன்று சதவீதம் வட்டியும் மேலும் மூன்று மாதங்கள் தாமதமானால் பதினெட்டு சதவீதம் வட்டியும் கட்ட வேண்டுமென்றும் அதற்கு மேல் கால அவகாசம் கிடையாது என்றும் திட்டவட்டமாகக் குறிப்பிட்டிருந்தனர்!

''நானும், சொந்தமாக ஒரு வீடு கிடைக்கிறது என்ற மகிழ்ச்சியில் என் பி.எப். தொகையிலிருந்து ரூ 33,100 ஐ கடன் எடுத்து, முதல் தவணையாகக் கட்டினேன். மீதி தொகையான ரூ 31,900 ஐ சேர்க்க மனைவியின் நகைகளை விற்றும், மீதிப் பணத்தை வட்டிக்குக் கடன் வாங்கியதாலும் அவர்கள் குறிப்பிட்ட நாளிலிருந்து 35 நாட்கள் கால தாமதமாகிவிட்டது!

கால தாமதத்திற்கு வட்டியாக ரூ 692 ஐ சேர்த்துக்கட்டினால்தான் கணக்குச் சரியாகும் வீட்டை ஒப்படைக்க முடியும் என்று கறாராகக் கூறிவிட்டார்கள். கஷ்டத்தோடு கஷ்டம் என்று நினைத்து, 'அந்த வட்டிப் பணத்தையும் எப்படியெல்லாமோ புரட்டி, 1985 ஏப்ரல் 19 ந் தேதி ரூ 32,592 (31,900+692) ஐயும் கட்டிவிட்டு வந்தேன். ஆனால், இன்று வரை எனக்கு ஒதுக்கப்பட்ட வீடு, என்னிடம் ஒப்படைக்கப்படவில்லை!

''கேட்டால், 'வீட்டு வேலை முடியவில்லை. ஒரு மாதத்தில் தந்துவிடலாம்!' என்று தட்டிக் கழிக்கின்றனர். எல்லீஸ் நகரில் எனக்கு ஒதுக்கப்பட்ட வீட்டைச் சென்று பார்த்தேன். வீட்டு வேலைகள் மிகவும் தரக்குறைவாக உள்ளன. கதவுகள், ஜன்னல்களின் சட்டங்கள் சரியான முறையில் செய்து, பதிக்கப்படவில்லை. ஒயரிங் வேலை அரைகுறையாக உள்ளது. தண்ணீர், சாக்கடை வசதி போன்றவைகூட இன்னும் செய்து முடிக்கப்படவில்லை! நான், வீட்டு வசதி வாரியத்திடம் முழுப் பணத்தையும் கொடுத்துப் பத்து மாதங்களுக்கு மேலாகிவிட்டது! என்னைப் போல், இப்படி பணத்தைக் கொடுத்துவிட்டு விழிப்பவர்கள் ஏராளம்! நாங்கள் மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் தவிக்கின்றோம்!'' என்று அவர் சொல்லி முடிப்பதற்குள் அழுதது போல் ஆகிவிட்டார். அப்பாவி மக்களிடம் இப்படிக் கொள்ளையடிப்பதை நமது வீட்டு வசதி வாரியம் என்றுதான் நிறுத்துமோ தெரியவில்லை.

**— பானு மணாளன்**



# "எனக்கும் சமுதாயப் பார்வை உண்டு!"

மதுரை மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளிலும் சுற்றுப் பயணம் செய்து, பல்வேறு தரப்பட்ட மக்களையும் சந்தித்துப் பிரச்னைகளைத் தெரிந்து கொண்ட பிறகு, மாவட்ட கலெக்டரான ஆர். வரதராஜுலுவைச் சந்திக்கச் சென்றோம். அவரைச் சந்திக்கச் செல்லுமுன், 'நாங்கள் உங்களைச் சந்திக்க வருவது வெறும் பேட்டிக்காக மட்டுமல்ல; நாங்கள் சந்தித்த மக்கள் எங்களிடம் என்னென்ன குறைகளைச் சொல்லி முறையிட்டார்களோ, அவற்றையெல்லாம் உங்களிடம் எடுத்துச் சொல்லுவோம். அவற்றை நீங்கள் கேட்பதோடு, அந்தந்தத்துறைசம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் உடனிருக்கச் சொல்லி, அவர்களையும் குறித்துக் கொள்ளச் சொன்னால், நீங்கள் மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பதற்கும் சுலபமாக இருக்கும். எனவே, பேட்டியின் போது அவர்களையும் உடனிருக்கச் சொல்லுங்கள்!' என்று சொல்லியிருந்தோம்.

அதன்படியே நாங்கள் சென்றபோது கலெக்டருடன், மதுரை மாநகராட்சி கமிஷனர் எம். தேவராஜ், மாவட்ட வருவாய்த் துறை அதிகாரி கே. ராஜமாணிக்கம், கலெக்டரின் தனி உதவியாளர் காதர் மொஹ்தீன் ஆகியோரும், மற்றும் பல அதிகாரிகளும் தயாராய்க் காத்திருந்தனர். பேட்டி துவங்கியது.

கல்கி: 'அநேகமாக, நாங்கள் சுற்றுப் பயணம் செய்த ஒவ்வொரு கிராமத்திலும் குடிநீர்ப் பிரச்னைதான் மிகவும் பூதாகாரமாய் இருக்கிறது. ஆங்காங்கே ஆழ் துளைக் கிணறுகள் எனப்படும் அடி குழாய்கள் இருந்தாலும்கூடப் பெரும்பாலானவற்றில் தண்ணீரே வருவதில்லை என்றுதான் புகார் சொல்லுகிறார்கள். இதில் ஒரு வேடிக்கை, நல்ல பெருமான்பட்டி என்ற கிராமத்தில் அடி குழாயே போடப்படவில்லை. ஏன் இப்படி? குடிநீர் என்பது மிக மிக அத்யாவசியமானதல்லவா?

கலெக்டர் ஆர். வரதராஜுலு: நீங்கள் சொல்லுவதுபோல், பல கிராமங்களில் குடிநீர்ப் பிரச்னை இருப்பது உண்மைதான். நிலத்தடி நீர் மிக மிக ஆழத்தில் போய்விட்டது. அதனால் குழாய்களில் தண்ணீர் வருவதில்லை. அதற்கு யார்தான் என்ன செய்ய முடியும்? மீண்டும் அந்தக் குழாய்களை ஆழப்படுத்த முடியுமா? அப்படி ஆழப்படுத்தினால் தண்ணீர் வருமா என்று பார்த்துத்தான் செய்ய வேண்டும். 'நல்லபெருமாள்பட்டி' என்ற ஊரில் அடி குழாய் போட்டால் தண்ணீர் வரும் என்ற நிலை இருந்திருக்காது. அதனால் தான் போட்டிருக்க மாட்டார்கள். எதற்கும் அதை நான் மறுபடியும் ஆராயச் சொல்கிறேன்.

கல்கி: நிலத்தடி நீரை நாம் பயன்படுத்திக் கொண்டிருக்கும் அளவுக்கு, மழைக் காலத்தில் மீண்டும் நாம் எடுத்த நிலத்தடி நீரைச் சேமிப்பதில்லை. எப்படி எடுத்தோமோ அப்படியே சேமிக்கவும் செய்தால் பிரச்னை நீருமல்லவா?

கலெக்டர்: உண்மைதான். ஆனால் அதற்கு ஒரு மாவட்ட கலெக்டர் என்ன செய்ய முடியும்? அரசுதான் அதைச் செய்ய வேண்டும். அரசும் அது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பதாகத்தான் கருதுகிறேன்.

கல்கி: அடுத்து, சாலை வசதி. அதுவும் மிகமோசமான நிலையில்தான் இருக்கின்றது. அகமலை என்ற மலைக்கிராமத்திற்கும், அதைச் சுற்றியுள்ள கிராமங்களுக்கும் சாலை வசதியே இல்லாததால் மக்கள் மிகவும் சிரமப்படுகிறார்கள். இருந்த சாலையும் பராமரிக்கப்படாததால் அதுவும் பயனற்றுப் போய்விட்டது....

கலெக்டர்: மதுரை மாவட்டத்தில் மட்டும் சுமார் 1,140 கி. மீ. சாலைகள் பஞ்சாயத்திலும் இல்லாமல், ஹைவேஸிடமும் இல்லாமல் இருப்பதால் அவற்றை யார் பராமரிப்பது என்பதில் பலபிரச்னைகள். அகமலையைப்

பொறுத்தவரை மேற்குத் தொடர்ச்சி மலை அபிவிருத்தி வாரியத்திடம் நிதியிருந்தால் சாலை போட்டுவிடலாம்; பிரச்னை இல்லை. ஆனால் மக்களின் உபயோகத்தையும், தேவையையும் பொறுத்துத்தான் அதைச் செய்ய முடியுமே தவிர, நிதியை அநாவசியமாக விரயடித்து விட முடியாது. மேலும் அந்தப் பகுதியிலிருந்து அரசுக்குவரும்வருமானத்தையும் பொறுத்திருக்கிறது. காட்டிலாகாவின் அனுமதியும் பெற்றாக வேண்டும்.

கல்கி: ஆண்டொன்றுக்கு அப்பகுதியிலிருந்து மட்டும் அறுபதாயிரம்ரூபாய் அரசுக்குக் கிடைப்பதாகச் சொல்கிறார்கள். மேலும் அங்குள்ள சிலரின் நிலங்களுக்குப் பட்டா கொடுப்பதிலும் பிரச்னைகள் இருக்கின்றன. அதோடு உத்தமபாளையம் தாலுகாவிலிருக்கும் இப்பகுதியைப் பெரியகுளம் தாலுகாவோடு இணைத்துவிட்டால்வசதியாக இருக்குமென்றும் சொல்கிறார்கள்....

கலெக்டர்: அறுபதாயிரம் ரூபாய் வருமானமா? சரியாகத் தெரியவில்லை. பார்க்கச் சொல்கிறேன். பட்டாக் கொடுப்பதிலுள்ள தாமதத்திற்கான காரணங்களைப் பார்த்து ஆவன செய்யச் சொல்கிறேன். அந்தப் பெரியகுளம் தாலுகாவில் இணைக்க வேண்டும் என்பதையும் கவனிக்கிறேன். சர்வே செய்யச் சொல்கிறேன்.

கல்கி: வெங்கடாஜலபுரத்திற்கு வரும் பி.டி. ராசன் கால்வாய், இப்போது ஆளுங்கட்சி எம்.எல்.ஏ'வின் ஆதிக்கத்தில் சிக்கிக் கொண்டதால் தங்கள் ஊருக்குத் தண்ணீரே விடப்படுவதில்லைஎன்று மக்கள் சொல்கிறார்கள். சம்பந்தப்பட்ட அதிகாரிகள் லஞ்சம் வாங்குவதாகவும் ஆதங்கப்படுகிறார்கள்....

கலெக்டர்: நீங்கள் சொல்லும் குற்றச்சாட்டுஎந்த அளவுக்குஉண்மைஎன்று தெரியவில்லை. விசாரித்துத்தான் சொல்ல வேண்டும். ஒருவேளை வெங்கடாஜலபுரத்துக்கு வரும் கால்வாய்,தண்ணீர் செல்வதற்கு ஏற்றபடி இருக்காது என்று நினைக்கிறேன்.

கல்கி: தண்ணீர் செல்வதற்கு ஏற்றதல்ல என்றால் எதற்காக லட்சக் கணக்கில் செலவு செய்து கால்வாய் வெட்ட வேண்டும்?

கலெக்டர்: (உதவியாளரிடம் குறித்துக் கொள்ளச் சொல்கிறார்.) தீர விசாரித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: அதேபோல்தான் மஞ்சளாறு அணைப் பகுதி நீரிலும் பிரச்னை. தேவதானப்பட்டி மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். நிர்ணயிக்கப்பட்ட விகிதாச்சாரப்படி தண்ணீர் விடப்படுவதில்லை என்று சொல்கிறார்கள்....

கலெக்டர்: இது குறித்து வத்தலகுண்டு மக்களும், தேவதானப்பட்டி மக்களும் என்னைச் சந்தித்தார்கள். எனக்குத் தெரிந்த அளவில் இருக்கும் தண்ணீர் ஒழுங்காகத் தான் பகிர்ந்துவிடப்படுகிறது. இல்லையென்று ஆதாரபூர்வமாக மக்களிடமிருந்து புகார் வரும்போது உடனடியாகக் கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: வைகை அணைக்காகத் தங்கள் இடங்களைக் காலி செய்து கொண்டு வந்த T. காமக்காபட்டி மக்களுக்கு அப்போது அரசு உறுதிமொழியளித்தபடி இன்னும் பட்டா கொடுக்கப்படவில்லை....

கலெக்டர்: எதுவுமே முறைப்படி நடக்க வேண்டும்என்பதால்கொஞ்சம்தாமதமாகத் தான் செய்யும். அதுவும் அந்தப் பகுதி காட்டிலாகாவுக்கு நடுவில் இருக்கும் பகுதி. எனவே அதற்கு மாநில அரசு இந்திய அரசிடமும் அனுமதி வாங்க வேண்டும். அதனால் சிறிது தாமதப்படத்தான் செய்யும்.

கல்கி: ஓரிரண்டு ஆண்டுத்தாமதம்என்றால் பிரச்னை இல்லை. ஆனால் இருபத்தேழு ஆண்டு காலத் தாமதமா? அப்படியானால் அரசின் மீதும், அதிகாரிகள் மீதும் மக்களுக்கு எப்படி நம்பிக்கை வரும்?

கலெக்டர்: என் இடத்தில் நீங்கள் இருந்து கொண்டு பிரச்னைகளைப் பார்த்தால் நீங்கள் இப்படிக் கேட்க மாட்டீர்கள். கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: அதே கிராமத்தில் இரண்டு தெருக்கள் ஆண்டிப்பட்டி தொகுதியிலும், இரண்டு தெருக்கள் பெரியகுளம் தொகுதியிலும் இருப்பது அந்த மக்களுக்குச் சிரமமாக இருக்கிறதாம். அனைத்தையும்பெரியகுளம்தொகுதியோடு இணைக்கச் சொல்கிறார்கள்.

கலெக்டர்: அது ஒன்றும் பெரிய விஷயமல்ல. ஆவன செய்ய உடனே ஏற்பாடு செய்கிறோம்.

கல்கி: ஆண்டிப்பட்டியிலுள்ள மருந்தகத்தில் ஒரு ஸ்பிரிட் கூட இல்லாமலிருப்பது வேடிக்கையாக இருக்கிறது.....

கலெக்டர்: அது விரைவில் இன்னும் விரிவுபடுத்தப்பட இருக்கிறது.

கல்கி: ஆண்டிப்பட்டியை ஒட்டியுள்ள பாப்பம்மாள்புரத்தில், கோயில் நிலம் காலியாகத்தான் இருக்கிறது. அதன் ஒரு பகுதியைத் தனியாருக்கு லீஸுக்கு விட்டிருக்கிறார்கள். ஆனால் பள்ளிக்கூடம் கட்டுவதற்காகக் கொடுக்க மறுக்கிறார்கள்....

கலெக்டர்: அரசின்ஒருதுறையின்கீழுள்ள நிலத்தைப் பொதுமக்கள் நலனுக்காக இன்னொரு துறை கையகப்படுத்தும் விஷயம் இருக்கிறதே..... அதைப் புரிந்து கொள்ள நீங்களெல்லாம் அரசில்தான் பணிபுரிய வேண்டும். அந்த விஷயத்தையும் கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: ஆளைக் கொல்லும் அருவியான கும்பக்கரை அருவி பற்றி என்ன சொல்கிறீர்கள்?

கலெக்டர்; உடனடியாக எச்சரிக்கை போர்டு போட ஏற்பாடு செய்கிறேன். நிதி வசதியைப் பொறுத்து மற்ற விஷயங்களையும் கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: கள்ளிக்குடியருகில் அடிக்கடி விபத்துக்கள் நடக்கின்றன. அவற்றைத்

— மதுரை கலெக்டர் வரதராஜுலு

தடுக்க 'ஸ்பீட் பிரேக்கர்'கள் போட்டாலே போதும் என்கிறார்கள். ஏன் போடவில்லை?

கலெக்டர்: நேஷனல் ஹைவேஸ்களில் ஸ்பீட் பிரேக்கர் போடக்கூடாது என்று விதி இருக்கிறது....

கல்கி: அப்படியா? நேஷனல் ஹைவேயிலேயே வருகிற சென்னை—திருச்சி சாலையில் மேல்மருவத்தூரில் மட்டும் போடப்பட்டிருக்கிறதே! அங்கு மட்டும் விதிவிலக்கா?

கலெக்டர்: அங்கு போடப்பட்டிருப்பது எனக்குத் தெரியாது. உடனே கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: திருமங்கலத்தில் முன்பு வீட்டு மனைகளாக விற்கப்பட்ட இடத்தை இப்போது தொழிற்பகுதியாக அறிவித்து வீடுகள் கட்டக்கூடாது என்கிறார்கள். ஆனாலும் மூன்று வீடுகள் கட்டப்பட்டிருக்கிறதாம். அதாவது லஞ்சம் கொடுத்தால் கட்ட அனுமதிக்கப்படுகிறதோ என்னவோ? நீங்கள் விசாரிக்க வேண்டும்.

கலெக்டர்: ஆரம்பத்தில் வீட்டு மனைகளாக விற்கப்பட்ட இடத்தை எப்படித் தொழிற்பேட்டையாக அறிவிக்க முடியும்? முடியாது. உடனே கவனிக்க ஏற்பாடு செய்கிறேன்.

கல்கி: மதுரை நகருக்குள்ளேயே மாடுகள், எருமைகள் ஆகியவற்றை அறுக்கிறார்கள். அதனால் அந்த இடமே பார்க்கச் சகிக்க முடியாத அளவுக்குத் தோற்றமளிக்கிறது...

கலெக்டரின் பக்கத்திலிருந்த கமிஷனர் அவசரமாகக் குறுக்கிட்டு: இன்னும் ஒரே மாதத்தில் அது ஊருக்கு ஒதுக்குப்புறமாக மாற்றப்பட்டுவிடும்.

கல்கி: மதுரை பஸ் ஸ்டாண்டை ஒட்டியுள்ள எல்லீஸ் நகருக்குப் பக்கத்திலேயே இருக்கும் சுடுகாடு திறந்த வெளியாக இருப்பதால் பிணங்களை எரிக்கும்போது வரும் துர்நாற்றம் சுகாதாரக் கேடாக இருக்காதா?

கமிஷனரே மீண்டும் பதில் சொல்கிறார்: கண்காணிக்கிறோம். சுகாதாரக் கேடாக இருக்கும்பட்சத்தில், தடுப்புப் போட்டு மயானத்தை ஒதுக்கித் தர ஏற்பாடு செய்கிறோம்.

கல்கி: மீனாட்சியம்மன் கோயிலைச் சுற்றி, வரும் டூரிஸ்ட்டுகள் சிறுநீர் கழித்து அசிங்கப்படுத்துகிறார்கள். எனவே அந்தப் பகுதிகளில் டூரிஸ்ட் பஸ்களை நிறுத்தவே அனுமதி தராவிட்டால் இந்த அசிங்கம் தடுக்கப்படுமல்லவா?

கலெக்டர்: டூரிஸ்ட் பஸ்களை நிறுத்துவதற்கு மாற்று ஏற்பாடு செய்துவிட்டு, அந்தப் பகுதிகளில் நிறுத்தத் தடை செய்துவிடுகிறோம்.

கல்கி: மதுரை பஸ் ஸ்டாண்டுகளில்கூட எந்த பஸ் எங்கு போகும், எங்கு நிற்கும் என்பதற்கான சரியான போர்டுகள் இல்லையே?

கலெக்டர்: உடனே ஏற்பாடு செய்கிறோம்.

கல்கி: பாதசாரிகளின் பாதுகாப்புக்காகவும் போக்குவரத்து நெரிசலைக் குறைக்கவும் சில இடங்களில் சுரங்கப் பாதை அமைக்கலாமே?

கலெக்டர்: உலக வங்கியின் உதவியுடன் அதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

கல்கி: சாதாரணமாக மதுரை நகர ஆட்டோக்களில் மீட்டர் இருந்தாலும் போடப்படுவதில்லை. அவர்கள் கேட்பதைத்தான் கொடுக்க வேண்டியிருக்கிறது. நீங்கள் ஏன் நடவடிக்கை எடுப்பதில்லை?

கலெக்டர்: இந்த விஷயத்தை ஒரு சாதாரண போலீஸ்காரரே செய்யலாம். ஆனால் என் வரைக்கும் புகார் வருகிறது. என்ன செய்வது? கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: நாங்கள் சென்ற பல இடங்களிலும் உங்களைப் பற்றி ஒரு நல்ல அபிப்ராயம்தான் சொன்னார்கள். மக்களுடைய குறைகளைக் கூர்மையாகக் கேட்பதாகச் சொன்னார்கள். அந்த வகையில் நீங்கள் செய்த சாதனைகள் என்று எதையாவது சொல்ல முடியுமா?

கலெக்டர்: எத்தனையோ சாதனைகள் நிகழ்ந்திருக்கின்றன. ஆனால் அவையெல்லாம் என்னுடையவைகளாக எப்படிச் சொல்லிக் கொள்ள முடியும்? அனைத்துமே அரசின் சாதனைகள்தான். சிலர் என்னைப் பற்றிக் குறைகளும் சொல்லக் கூடும். ஏனெனில் ஒரு நியாயமான முடிவை எடுக்கும் போதுகூடச் சிலர் விரோதம் பாராட்டத்தான் செய்வார்கள். ஏன்? நானேகூட பத்து முடிவுகளை எடுக்கும்போது அவற்றில் ஒன்றைத் தவறாகவும் முடிவெடுத்துவிடக் கூடும். ஆனாலும் நான் சமுதாயப் பார்வையோடு செயல்படுகிறேனா என்பதுதான் முக்கியம். எப்படி உங்களைப் போன்ற பத்திரிகையாளர்களுக்கும், பத்திரிகைகளுக்கும் சமுதாயப் பார்வை உண்டோ அப்படி எனக்கும் உண்டு என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். தாங்கள் கொடுக்கும் செய்திகளில் ஒரு பரபரப்பு வேண்டும் என்பதற்காகவே சம்பந்தப்பட்ட எதிர்த் தரப்பினரைச் சந்திக்காமலேயே சில பத்திரிகைகள் செய்திகளைப் பிரசுரித்து விடுகின்றன. இது கூடாது. அந்த வகையில் நீங்கள் என்னைச் சந்திக்க வந்தது குறித்து மகிழ்கிறேன். மக்களின் பிரச்னைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்திருக்கும் இன்றைய பத்திரிகைகளின் போக்கு பற்றியும் மகிழ்கிறேன். நன்றி.

கல்கி: நாங்கள் சொன்ன பல்வேறு குறைகளையும் கேட்டதற்காகவும் — அவற்றையெல்லாம் சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் குறித்துக் கொள்ளச் சொல்லி ஆவன செய்யச் சொன்னதற்காகவும் உங்களுக்கும் மற்ற அதிகாரிகளுக்கும் மிக்க நன்றி. இவற்றோடு நாங்கள் சொன்ன இந்தக் குறைகளெல்லாம் தீர்க்கப்பட்டனவா என்பதையும் பிறகு எங்களுக்குத் தெரிவித்தால் அதை வாசகர்களுக்குத் தெரிவிக்க உதவியாயிருக்கும். நன்றி.

படம்: மனோ.



# நிலவே மலரே

தமிழுக்குப் புதிதாய் அறிமுகமாகியிருக்கும் ரஹ்மானிடம் இன்னின்ன திறமைகள் எல்லாம் அடக்கம் என்று பட்டியல் போட்டுக் காண்பிக்கிற மாதிரி:

முதலில் ஒரு டான்ஸ் ஸீன் — பரவாயில்லை ஆடுகிறார்.

அப்புறம் ஒரு சண்டை ஸீன் — பரவாயில்லை நன்றாகச் சண்டை போடுகிறார்.

அப்புறம் ஒரு அழுகை ஸீன் — உதட்டை மடித்து, மூக்கை அழுத்தி, கண்களைச் சிவக்கச் செய்து கண்ணீர் வரவழைத்து — பரவாயில்லை நன்றாக அழுகிறார்.

ஆனால் அதில் பாருங்கள், உடனே இன்னொரு டான்ஸ், இன்னொரு சண்டை, இன்னொரு அழுகை, சிரிப்பு என்று காட்டும்போதுதான் திகட்டிப் போகிறது!

அதனால் என்ன ஆயிற்று? இடைவேளைக்கு அப்புறம்தான் கதையே என்று சொல்லிவிட்டார்கள்.

நண்பனுக்காகத் தான் காதலித்தவளை விட்டுக் கொடுத்து, கண்ணீர் சிந்தி, ரத்தம் கக்கி உயிரை விடும் தியாகத்திலகம்ரோல்ரஹ்மானுக்கு. நன்றாகவேபண்ணி விட்டார்.

'பூவே பூச்சூட வா' எதிர்பார்ப்புடன் போனால் இந்தப் படத்தில் நதியா ஒரு பெரிய புஸ்ஸ்... சும்மா புடவைசுற்றிக்கொண்டு, பொட்டு வைத்துக்கொண்டு, பூ வைத்துக் கொண்டு, டிஃபன், சாப்பாடு பரிமாறி வீட்டை வளைய வரும் ரோல். அதில் இரட்டை ரோல் வேறு. அந்த இரண்டாவது ரோலில் முதலில் கொஞ்ச நேரம் ஜீன்ஸ், மிடி, சல்வார் என்று வந்து கொஞ்சம் துள்ளுவது மட்டும் ஆறுதல்.

ராஜேஷிற்கு — அவருக்காகவே வார்க்கப்பட்ட மாதிரி ஒரு ரோல். பச்சக்கென்று பொருந்தியிருக்கிறார்.

பேபி ஷாலினிதான் இந்தப் படத்தில் எல்லாமே. அந்தத் துருதுருப்பு, கண்களின் அகல விரிப்பு, உப்பு மூட்டையில் துள்ளும் துள்ளல், திடீர் அழுகை, திடீர்ச் சிரிப்பு எல்லாம் பார்த்தால் இன்னொரு நூற்றாண்டிற்கு இந்த மாதிரி ஒரு குழந்தை நட்சத்திரம் உருவாகவே போவதில்லை என்று சொல்ல வைத்து விடுகிறது.

இரண்டு மூன்று பாடல்கள் இனிமையாக இருக்கிறதே, இசை யாராக இருக்கும் என்று பார்த்தால் — அட, நம்ப எம். எஸ். வி.! பழைய எம். எஸ். வி.தான்! பலே, பலே.

கோர்ட், கொலை, சட்டம் என்று சதிராடிக் கொண்டிருந்த சந்திரசேகர் திடீரென்று லைன் மாறிக் குடும்பம், காதல் என்று வண்டியை ஓட்டியிருப்பது வரவேற்கப்பட வேண்டிய ஒன்றுதான்.

அது சரி... அந்த புஸ்வாண வில்லன் படத்தில் என்ன சாதித்திருக்கிறார்? அவரும் செந்திலுமாய்ச் சேர்ந்து ஃபோட்டோ எடுப்பதும், மூட்டிவிடப் பார்ப்பதும் அம்புலி மாமாத்தனமாக இல்லை?

— ஜெயமன்மதன்.



வட்டமேஜை

# இலக்கியாவுடனு? ... பேட்டி

* சும்மாக் காயும் சூரிய ஒளிக்கு இவ்வளவு மகத்துவமா? விவிக்கான் பற்றிய சிறப்பான விளக்கம் என் நீண்டநாள் ஐயங்களைத் தீர்த்தது.

திருவையாறு. குடந்தை. கோ. முரளி.

* பலே ஆள்தான் சார் நீங்கள்! தத்துவஞானி ஜே. கே. பற்றி அழகான ஓர் அஞ்சலித் தலையங்கம் எழுதத் தொடங்கி, முடிக்கும்போது விலா எலும்பு நொறுங்கும்படியாக நமது அரசியலில் ஓர் இடி இடித்திருக்கிறீர்களே!

ஸ்ரீரங்கம், வி. சௌரிராஜன்.

* சிலம்பரசனின் பேட்டி கண்டேன். அடுத்து நீங்கள் சக்கியாவுடன் (இலக்கியா) நடத்தவிருக்கும் பேட்டி இப்படி இருக்குமோ?

நிருபர்: சக்கியா (இலக்கியா) கண்ணு டான்ஸ் ஆடு பார்க்கலாம்!

சக்கியா கை, கால்களை உதைத்துச் சிரிக்கிறது.

நிருபர் அதன் நளினத்தை வியந்து பார்க்கிறார்.

நிரு: 'சோகக் காட்சியில் நடி பார்க்கலாம்!'

ஆ... ஆ... குழந்தை அழத் தொடங்குகிறது (நடிப்பு?)

நிருபர் திகைப்பில் இருந்து விடுபடவே இல்லை.

சிங்காரப்பேட்டை, என். சங்கர்.

* நம்ப சிம்பரசன் பேத்தி அத்தகாசம்!

போடி நாயக்கனூர், எம். ரமேஷ்குமார்.

* 'எங்கள் கிராமத்து ஞான பீடம்' ஓர் இயல்பான கவிதைக் கூடம். 'வீட்டுக் கவலையோடு வகுப்பில் சிரிக்கும் ஆசிரியர்கள்...' நினைவில் நிற்கும் நயமான சிந்தனை.

திருச்சி — 14. தமிழினியன்.

* 'ஆவிக்கும் உண்டு பாசம்' சிறுகதையைப் படித்தேன். ஓர் அண்ணன், தன் தங்கையின் மீது கொண்டிருந்த அன்பை வித்தியாசமாக வெளிப்படுத்தியிருந்தார் கதையாசிரியர்.

சீர்காழி, க. இளங்கோ.

* பாக் அனுகுண்டு நிஜமானதா...? — டாலர்களை அள்ளித்தரும் ஆடைகள், —பெட்ரோலில் ஒருவிவிக்கான் புரட்சி... என்று ராணுவம், விஞ்ஞானம், வியாபாரம் போன்ற வித்தியாசமான மெய்ஞானக் கவர்ஸ்டோரிகளைத் தரும் கல்கியா 'ஆவிக்கும் உண்டு பாசம்' போன்ற அமானுஷ்யக் கதைகளை வெளியிடுவது? நம்ப முடியவில்லை சார்!

ஒண்டிப்புதூர், கா. க. வேலாயுதன்.

* 'பல்லாவரத்துப் பரமேசுவரன்' கட்டுரை வாயிலாகத் 'திரிசூலம்' கோவிலுக்கே நம்மை அழைத்துச் சென்றுவிட்டார் ஆனந்தி. கோவிலில் காணப்பட்ட குறைகளையும் குறிப்பிட்டிருந்த விதம் பாராட்டுக்குரியது.

கோவை, உமார்த்தி.

* நினைவே நெருப்பாகி, நெஞ்சே உலையாகி... ஆற்றொழுக்கான நடையில் அமைந்த அந்தச் சிறுகதை என் நெஞ்சுகள் ஒரு சலசலப்பை ஏற்படுத்திவிட்டது.

கடலூர் — 2, ஆர். வேலுமணி.

* என்னுடைய ஜோக்கை "ஜெராக்ஸ்" ஜோக் என்று குறிப்பிட்டு வட்டமேஜையில் கடிதம் வெளியாகியிருப்பது பார்த்து வருந்தினேன். நான் ஜோக்கைத் தங்களுக்கு அனுப்பி வெகு காலம் சென்றே பிரசுரிக்கிறீர்கள். துணுக்கை நான் அனுப்பிய பிறகு ரிலீஸாகும் ஒரு சினிமாவில் அந்த ஜோக் இடம் பெற்றால் நான் என்ன செய்ய முடியும்? குற்றம் என்னுடையதல்ல.

கொப்பம்பட்டி, அன்பு மதியழகன்.

* தோல் பதனிடும் தொழில் சம்பந்தமாக 9.2.86, 16.2.86 தேதிய இதழ்களில் தாங்கள் எழுதியுள்ள கட்டுரைகளைப் படித்தேன். பல்வேறு விஷயங்களைச் சுவைபடவே எழுதியுள்ளீர்கள். ஆனாலும் ஒரு குறை. இந்தத் தொழிலில் தங்கள் உழைப்பைக் கொடுத்து, துர்நாற்றம் வீசும் அசுத்தமான சூழ்நிலைகளில், இரசாயனப் பொருட்களைப் பயன்படுத்தி சரத் தோலைப் பதப்படுத்தப் போராடுகிறார்களே — இத்தொழிலின் மேம்பாட்டுக்கு அடிப்படைக் காரணமாக இருக்கிறார்களே — தொழிலாளர்கள் — இவர்களுடைய பரிதாப நிலை பற்றியும் எழுதியிருந்தால் முழுமை பெற்றிருக்கும். இவர்கள் வாங்கும் சம்பளம் என்ன தெரியுமா? — நாளொன்றுக்கு ரூ. 8/— லிருந்து 12/— வரைதான்.

1985 ஆம் ஆண்டு வரை தமிழக அரசு நிர்ணயம் செய்திருந்த குறைந்தபட்ச ஊதியம் ரூ. 5.50 தான். 1986 ஜனவரி 8 ந் தேதி முதல் இது ஓரளவு உயர்த்தப்பட்டு இருக்கிறது. மேலும் இந்த ஆண்டு பிப்ரவரி 6 ந் தேதி ஏற்பட்டுள்ள ஒப்பந்தம் மூலம் மாதம் ரூ. 100/— வரை தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு கிடைக்க வழி செய்யப்பட்டுள்ளது. இது கிடைத்த பின்னும், பல ஆண்டுகள் சர்வீசைச் செய்த தொழிலாளிக்கு மாதமொன்றுக்கு ரூ. 600/— தான் கிடைக்கும். இதுவும் எங்கெல்லாம் தொழிற்சங்கங்கள் பலமாக இருக்கின்றனவோ அங்கெல்லாம்தான் கிடைக்கும். மற்ற இடங்களில் முதலாளிகள் கொடுப்பது எவ்வளவோ அவ்வளவுதான்! அப்பாவித் தொழிலாளர்கள் பல விதங்களில் ஏமாற்றப்படுகிறார்கள்.

தோல் பதனிடும் தொழிலில் நவீன மாறுதல்கள் வந்துள்ளன; வரப் போகின்றன. இந்தத் தொழிலாளர்களின் வாழ்க்கையில் மாற்றம் எப்போது? ஆழமாகப் பரிசீலிக்க வேண்டிய கேள்வி!

சென்னை — 12. எஸ். சந்திரசேகரன்.

(சி. ஐ. டி. யு., சென்னை மாவட்டக் குழு).

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.



# சுற்றுலா பொருட்காட்சி

## தீவுத்திடல் - சென்னை.



"எதிர்கால உலகை நிர்ணயிக்கும்
பிஞ்சு நெஞ்சங்களுக்கு உவகை ஊட்ட
இன்றே குடும்பத்துடன் வருகை தாரீர்!"





- வண்ண மீன்களின் அற்புதக் கண்காட்சி
- குழந்தைகள் உல்லாச உலகம்
- இராட்சித ராட்டினம்
- சிறுவர் ரயில்
- பாம்பு பண்ணை





DIPR-86/ELEGANT



# பிலிப்ஸ்

## கேட்டீர்களா முற்றும் புதியது ?

பிலிப்ஸ் டூ-இன்-ஒன்களின்
வெகு நேர்த்தியான ஒலி இன்பம்.
ஸ்டீரியோ மற்றும் மோனோ.
எழிலோங்கும் வடிவம், கண்கவர் டிசைன்,
இவற்றின் விசாலமான அணிவகுப்பு.
ஒலித்திறனிலும்
இயங்குவதிலும் சர்வதேசத்
தரத்தை வழங்குபவை.
இவற்றுக்கும் பின்பலமாக நாடெங்கும்
பரவலாக உள்ள ஸர்விஸ் வசதி.





D8334 ரூ.3400/-*



D8248 ரூ.3150/-*



AR538 ரூ.2200/-*



AR448 ரூ.1800/-*



AR343 ரூ.1450/-*



AR243 ரூ.1300/-*



AR153 ரூ.1196/-**



AR151 ரூ.1095/-**



AR143 ரூ.1025/-*

## நாங்கள் வழங்குபவை தேர்வுக்குச் சிறந்தவை.

*எக்ஸைஸ் வரி உட்பட. தல வரிகள் தனி. லைஸென்ஸ் தேவை இல்லை.

CLARION/B/P/126/193 TAL

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**